

# ஹெரிட்டேஜர் HERITAGER

பயணம் : 2 பதிவு : 1 தமிழ் மரபுசார் இதழ் ஜனவரி 1முதல் 15 வரை - 2019

## “தமிழர்களுக்கு கட்டடக்கலை அறிவே இல்லை” என்ற பொய்க்கூற்றை உடைத்த “கீழடி அகழாய்வு”



Click for Subscription



பயணம் : 2 பதிவு :1

"ஹெரிட்டேஜர்" தமிழ் இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.

ஹெரிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908

கட்டுரைகளை அனுப்ப:
news@heritager.org

முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa

Telegram











அட்டைப்படம்:
சுதாகர் நல்லியப்பன்
இடம்:
மாவடைப்பு, திருப்பூர்



TAP HERE TO DOWNLOAD FOR Android

# வாசகர்கள் உதவிக்கரம் அளிப்பீர்




அன்பு வாசகர்களுக்கு, தையிலிருந்து நமது இதழ் திங்கள் இருமுறை இதழாக வருகின்றது. இதழ் உருவாக்கத்திற்கான பணிச்சுமையை வரலாற்றுத் தேடல் குழுவினர் பகிர்ந்து கொள்கின்றோம். எங்களுக்கு ஏற்படும் நிதிச் சுமையை எங்களோடு சேர்ந்து பகிர்ந்து கொள்ள வாசகர்களை அழைக்கின்றோம். இங்கு அழுத்தி உதவுவீர்.





# மக்கள் திருவிழா பொங்கல்

## – AT. மோகன்




சேலம் மாவட்டம், அழகு பூக்கள் தொண்டு நிறுவனம் மற்றும் ரோட்டரி சங்கம் சார்பாக பள்ளி மாணவர்களுடன் சமத்துவ பொங்கல் விழா கொண்டாடப்பட்டது.

வேதாரண்யம் பகுதியில் கஜா புயலால் பாதிப்படைந்து மீண்டு வரும் பகுதியில் உள்ள பள்ளியை சீரமைத்தும், பொங்கல் சீர் வழங்கியும் இவ்வாண்டு பொங்கல் விழா துன்பத்தில் உழன்றுவரும் மக்களுக்காக கொண்டாடப்பட்டது.

வேதாரண்யம் பகுதி, வெள்ளிக்கிடங்கு கிராமத்தில் இருக்கும் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளியை தத்தெடுத்து அந்த பள்ளிக்கு வேண்டிய அனைத்து உதவிகளும் செய்து தரும் பணிகள் பொங்கலுக்கு முதல் நாள் மேற்கொள்ளப்பட்டது.

அதன் தொடர்ச்சியாக, பள்ளிக்கு வெள்ளை அடிக்கும் பணிகள் மேற்கொள்ளப்பட்டு கடந்த இரண்டு நாட்கள் அங்கேயே இருந்து பொங்கல் திருவிழாவை பள்ளி மாணவர்கள் மற்றும் அவர்களது பெற்றோர்களுடன் கொண்டாட அனைத்து பணிகளும் ஏற்பாடு செய்யப்பட்டது. மேலும், 14-01-2019 அன்று காலை 8.00 மணியில் இருந்து ஓட்டப்பந்தயம், நீளம்தாண்டுதல், சாக்குபை ஓட்டப்பந்தயம், இசைநாற்காலி போன்ற 15 விதமான விளையாட்டு போட்டிகள் மாணவர்களுக்கு நடத்தப்பட்டது. விழா நிறைவின் போது இப்போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்கள் அனைவருக்கும் பரிசுகள் வழங்கப்பட்டது. மேலும் போட்டிகளில் கலந்து கொண்ட மாணவர்களை ஊக்கப்படுத்தி, அனைவருக்கும் எழுதுபொருட்கள் பள்ளிக்கு கம்பியில்லா மைக் மற்றும் ஸ்பீக்கர் வழங்கப்பட்டது.





அதுமட்டுமின்றி கஜா புயலால் பாதிப்படைந்த மாணவர்களின் பெற்றோர்கள் அனைவருக்கும் பொங்கல் சீராக வேட்டி, சேலை, பாய் போன்றவை வழங்கப்பட்டன. விழாவில் கலந்துக்கொண்டு சிறப்பித்த அனைவருக்கும் மதிய உணவு பரிமாறி பொங்கல் விழா மிக சிறப்பாக கொண்டாடப்பட்டது.

இதுவரை குடும்பத்துடன் கொண்டாடிய பொங்கல் விழாவை ஊர் மக்களுடன் இணைந்து கொண்டாட சிறப்பாக ஏற்பாடு செய்த ரோட்டரி சங்க எண் RID2982 உறுப்பினர்களுக்கு மிக்க நன்றி.





பொங்கலின் இரண்டாம் நாள் சேலம் எருமாபாளையம் ஜருகுமலை அடிவாரத்தில் இருக்கும் ஈசா மரக்கன்றுகள் வளர்ப்பு பண்ணையில் சமத்துவ மாட்டு பொங்கல் கொண்டாடப்பட்டது.

அன்று மாடுகள் கட்டும் தொழுவத்தினைச் சுத்தம் செய்து, கால்நடைகளை குளிப்பாட்டி சுத்தம் செய்தோம். மாடுகளின் கொம்புகளை சீவி பளபளக்கும் வகையில் வண்ணம் பூசி, கூரான கொம்பில் குஞ்சம் அல்லது சலங்கையை கட்டிவிட்டோம். கழுத்துக்கு தோலிலான வார் பட்டையில் சலங்கை கட்டி அழகு படுத்தினோம். திருநீறு பூசி குங்குமப் பொட்டிட்டும் புதிய மூக்கணாங்கயிறு, தாம்புக் கயிறு அணிவித்து தயார் செய்தோம்.

விவசாயத்தில் பயன்படுத்தப்படும் உழவுக்கருவிகளை சுத்தம் செய்து சந்தனம், குங்குமம் வைத்து அலங்கரித்தோம்.

தாம்பாளத் தட்டுகளில் தோட்டம், காடுகளில் விளைந்த பயிர்பச்சைகளை வைத்து தேங்காய், பூ, பழம், நாட்டுச் சர்க்கரை என எல்லாம் பூஜைக்காக எடுத்து வைத்து தொழுவத்திலேயே பொங்கல் பொங்கி கற்பூர தீபாராதனை காட்டினோம். இதன் பின் பசு, காளை, எருமை என அனைத்து கால்நடைகளுக்கும் பொங்கல், பழம் கொடுத்தோம்.

தமிழ்நாட்டின் தென் மாவட்டங்களில் காளை பிடிக்கும் ஜல்லிக்கட்டு விளையாட்டு இந்நாளில் நடைபெறும்.

இந்த நன்னாளில் ஈசா மரக்கன்றுகள் பண்ணையில் புதுப்பானையில் பொங்கலிட்டு கொண்டாட வந்த நண்பர்கள் அனைவருக்கும் பொங்கல், கரும்பு, மதிய உணவு என பரிமாறிப்பட்டது.







# நான் கண்ட நடுகல்..
# – முனிராஜ் வாணாதிராயர்



வேலூர் மாவட்டம், வாணியம்பாடி வட்டம், ஆலங்காயம் ஊராட்சியில் உள்ள கூவல்குட்டை குக்கிராமத்தில் ஆலமரத்துவட்டம் என்ற இடம் உள்ளது. அங்குள்ள திரௌபதியம்மன் கோயில் நிலத்தில் கால்நடைகளுக்கு "கோமாரி நோய்" தடுப்பூசி பணியின்போது ஏதேச்சையாக நான் ஒரு நடுகல்லையும், ஒரு சதிகல்லையும் காண நேர்ந்தது.

முழுவதும் மஞ்சள் பூச்சுடன் குங்குமத்தை ஆங்காங்கே பொட்டாக இட்டிருந்த அந்த சின்னங்களில் ஏதேனும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளதா? என கவனித்த போது சதிகல்லில் பாதப்பகுதியின் கீழ் இடது மற்றும் வலது ஓரங்களில் பூ டிசைன் போன்று மேலிருந்து கீழாக எழுதப்பட்ட எழுத்துக்களை படிக்க முடிந்தது .

புடைப்பு சிற்பம் வேடர் போன்ற தோற்றத்தை தருகிறது. இடது கையில் வேட்டையாடிய பன்றி அல்லது முயல் போன்ற விலங்கை பிடித்துக்கொண்டு வலதுகரத்தில் ஆயுதமேந்தியுள்ளது . கீழே ஆணும் பெண்ணுமாக இருவர் கை கூப்பிய நிலையில் செதுக்கப்பட்டுள்ளனர்.

பெண் உருவத்தின் வலது ஓரத்தில். .
"பெரிய ககா என்றும்"
ஆண் உருவத்தின் இடது ஓரத்தில்...
"முளக பபண" என்றும், -
வெட்டப்பட்ட எழுத்துக்களை படிக்க முடிகிறது.

அக்காலத்திய கல்வெட்டு எழுத்துக்களுக்கு புள்ளி வைப்பது மரபின்மையென்பதால் அப்பெயர்கள் "பெரியக்கா - முளகப்பன்" எனவாதல் வேண்டும். இவர்கள் இறந்த மகனின் ஞாபகார்த்தமாக நடுகல்லும் எழுப்பியிருக்கவேண்டும். அல்லது இது சதிகல்லாக இருக்கவேண்டும். அருகிலேயே வில்லின் நாணிலிருந்து அம்பை பாய விட்டதைப் போன்ற தோற்றத்துடன், வலது ஓரத்தில் விலாவில் துளைத்த அம்புடன் வீரன் ஒருவனின் நடுகல்லும் உள்ளது. போரின் காரணமாக எதிராளியை நோக்கி இவன் அம்பை எய்ய , பகைவன் விட்ட அம்பு இவன் விலாவைத் துளைத்திருக்க வேண்டும். அதில் ஏதும் எழுத்துக்கள் இல்லை.

இந்த நடுகற்களை பற்றி இக்கோயிலுக்கு கும்பிட வந்த ஆட்களிடம் விசாரித்ததில், இதைப்பற்றியெல்லாம் விபரங்கள் ஏதும் தங்களுக்கு தெரியாதென்றும், கோயில் முன்பாக உள்ள சாமி என்ற ரீதியில் கும்பிட்டு வருவதாகவும் குறிப்பிடுகின்றார்கள்.

அந்த சிறிய கோயிலான திரௌபதியம்மன் என இவர்கள் வணங்கும் இத்தலத்தில் இங்கே வழிபடும் இனத்தினராக பள்ளி, குறும்பர், மராட்டிய ராவ், ஆகியோர் உள்ளனர். கோயில் அரசுடைமை ஆக்கப்பட்டுள்ளது. கோயிலுக்கு 12 ஏக்கர் அளவில் நிலம் உள்ளதாக கோயில் சம்பந்தப்பட்ட நபர்கள் தெரிவிக்கின்றனர்.

இந்த நடுகற்கள் உள்ள பகுதியிலேயே ரிஜிஸ்டரில் பதிய பெயர்களைக் கேட்டபொழுது முதியவர் ஒருவர் தமது தந்தையின் பெயர் மொளுகப்பன் எனக் கூறினார். ஆக இந்த நடுகல்லிற்குரியவன் இப்பகுதியை சேர்ந்தவனாகவே இருக்கவே வாய்ப்புள்ளதாக கருத முடிகிறது.

# உள்ளது உள்ளபடி..

– வேலுதரண் ( வே அ வேலுச்சாமி )



கனிசப்பாக்கம்.. தமிழ் நாட்டில் பன்ருட்டி அருகே உள்ள ஒரு அமைதியான கிராமம், எங்குத் திரும்பினும் கிணற்றுப் பாசனத்தில் நெல் வயல்கள், கரும்புத் தோட்டங்கள் கொய்யாத் தோப்புகள் என. ஞாயிற்றுக் கிழமை கூடத் தெருக்கள் வெறிச்சோடியே கிடந்தன. சிறுவர்கள் மட்டும் ஆங்காங்கே விளையாடிக்கொண்டு இருந்தனர். நாங்கள் சென்றதோ தமிழ் சமண சமயத்தைச் சார்ந்தவர்களால் நடத்தப் பெற்ற அகிம்சை நடையில் கலந்து கொள்ள, ஆனால் அங்குச் சென்ற பின்புதான் தெரிந்தது கனிசப்பாக்கம் சுமார் 1000 வருடத்திற்கு மேலான தொன்மையை தன்னுள்ளே புதைத்துக் கொண்டுள்ளது என்று.

சுமார் நான்கு ஆண்டுகளுக்கு முன்பு ஒருசமண தீர்த்தங்கரர் சிற்பம் ஒரு வரலாற்று ஆர்வலரால் கண்டுபிடிக்கப்பட்டது. அச்சிற்பத்திற்கு ஒரு சிற்றாலயம் அமைத்து அதில் பிரதிஷ்டை செய்யும் நோக்கத்துடனேயே நாங்கள் சென்றோம். அவ்வூர் மக்களை விசாரித்தபோது, இச்சிற்பத்தைப் புத்தர் என்று அழைப்பதாகவும், சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு வயல்வெளியில் இருக்கும் பொறையாத்தா கோயிலிலிருந்து இங்குக் கொண்டு வரப்பட்டு புதியதாகக் கட்டி முடிக்கப்படாமல் இருந்த முருகன் கோயிலில் வைக்கப்பட்டு இருந்ததாகக் கூறினர். இந்தத் தீர்த்தங்கரர் இங்கு வந்த பின்புதான் தடைப்பட்டு இருந்த முருகன் கோயில் கட்டி முடிக்கப்பட்டது என்றும் கூறினர். ( தீர்த்தங்கரரின் ராசியோ ..?)

புத்தராக அறிமுகப்படுத்தப்பட்ட இந்தத் தீர்த்தங்கரர் முக்குடையுடன் காணப்பட்டார். சாமரதாரிகளோ, சாமரமோ காட்டப்படவில்லை. மாறாக அந்த இடத்தில் ஒரு மேடு மட்டுமே காணப்பட்டது.காலத்தால் சிதைந்து இருக்கலாம். சிற்பத்தின் பின்புறம் மூன்று வரிகளில் கல்வெட்டுகள் மிகவும் தேய்வடைந்த நிலையில் காணப்பட்டது. எழுத்துக்களின் அமைதியை வைத்துத் தீர்த்தங்கரர் 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவராக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

இதற்குள் கனிசப்பாக்கம் கள்ளகபடமற்ற சிறுவர்கள் எனக்கு நண்பர்கள் ஆகிவிட்டனர். இந்தத் தீர்த்தங்கரர் இருந்த பொறையாத்தா கோயில் எப்படி இருக்கும் எனக் காண வேண்டிய ஆவலில், சிறுவர்களிடம் வழி கேட்க, வாங்க நாங்க கூட்டிட்டு போறோம் என்று எனக்கு முன்பாகவே ஓட்டமும் நடையுமாகச் சென்றனர். வயல் நடுவே பாதை மாறிப் பின்பு ஒரு வேப்பமரத்துடன்

உள்ள மேட்டுப் பகுதிக்கு அழைத்துச் சென்றனர். சரி ஒரு பழங்காலக் கோயிலைக் காணப்போகின்றோம் என்று நினைத்துச் சென்ற எனக்கு ஒரு அதிர்ச்சியே காத்திருந்தது. மேட்டுப் பகுதியில் நான் கண்டது வடக்கு நோக்கிய ஒரு சப்தமாதர் தொகுப்பு. இரு புறமும் வீரபத்திரரும், விநாயகரும் தனிச் சிற்பங்களாக, அம்மன் சிற்பமும் ஒன்று தனியாக இருந்தது. இங்குதான் புத்தர் எனப்பட்ட தீர்த்தங்கரர் இருந்தார் எனக்கூறினர் கிராம மக்கள். பூஜை ஏதாவது செய்வீர்களா என்று கேட்டதற்கு, ஆடி மாதம் காலணியிலிருந்து வந்து செய்வார்கள் என்று கூறினர். ஆய்வாளர்களின் கணிப்புப் படி இந்தச் சப்த மாதர் தொகுதி 7-8 ஆம் நூற்றாண்டுப் பல்லவர் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

சரி இது மாதிரியே இன்னும் சிலைகள் ஏதாவது இருக்கின்றதா? என்று நான் வினவ, ஆமாம் சார், இது மாதிரியே எங்கள் கொல்லைக்குள் ஒரு சிலை இருக்கு, வாங்க சார் நான் காட்டுகின்றேன் என்று ஒரு சிறுமி ஆர்வத்துடன் அழைத்துச் சென்றாள். கொல்லை என்பதை நான் ஏதோ வீட்டிற்குப் பின்புறம் தான் கூறுகின்றாள் என்று நினைத்துச் சென்றால் அச்சிறுமி கூட்டிச் சென்றது ஒரு கரும்புக் கொல்லைக்குள். ஒரு மேடான பகுதி (முன்பு மேடை இருந்ததாம்). அதன் மீது கிழக்கு நோக்கிச் சப்த கன்னியருடன், ஒரு பெண் வணங்கும் நிலையில் ஒரு சிற்பத் தொகுதியும் வானமே கூரையாக அமர்ந்து இருந்தனர். அதன் முன்பு இரு உருவங்கள், வீரபத்திரர் & அம்மனாக இருக்கலாம். கன்னிமார் சிற்பத்தின் பின்புறம் பக்தர்களால் அளிக்கப்பட்ட மரத்தாலான பெண் பொம்மைகள். கன்னிப்பெண்கள் வந்து பூசைகள் செய்தால் கல்யாணம் சீக்கிரம் நடக்கும் என்பது ஊராரின் நம்பிக்கை.

"சரி தம்பிகளா வேற என்னென்ன சாமி கோயில்களெல்லாம் உங்க ஊர்ல இருக்கு". "வாங்க சார் சிவன் கோவில் இரண்டு இருக்கு ஒன்னு மேல்நிலைத் தண்ணீர் தொட்டிக்கு அடியே காமன்சாமி மற்றொன்று கனியீஸ்வரன், இதோ இந்தத் தெரு கடைசில... முதலில் சென்றது மேல் நிலைத் தண்ணீர் தொட்டியின் கீழே. ஒரு நந்தியும் சிவலிங்கம் மட்டும் வெட்ட வெளியில், சிறுவர்கள் மட்டுமே பூஜைகளைச் செய்கின்றனர்" எனக் கூறினர். அருகே நிலத்தை உழுதபோது கிடைத்ததாக ஊர்மக்கள் கூறினர். ஆய்வாளர்கள் நான்கு அல்லது எட்டுத் திசைகளிலும் முற்காலத்தில் இம்மாதிரி சிவலிங்கள் நிறுவப்பட்டு இருக்கலாம் எனவும் காலத்தால் புதையுண்டு போயிருக்கலாம் எனவும் கூறினர்.

"சரி அது என்ன காமன் சாமினு பேரு?" இதோ இந்தச் சிவலிங்கத்துக்கு பின்னடி இருக்கு பாருங்க அவங்க பேரு தான் காமன் சாமி என்று இரண்டு கற்களைக் காட்டி!. அந்தக் காமன் சாமி கதையைக் கொஞ்சம் சொல்லுங்கனு கேட்டதிற்குக் கிராமத்து பாணியில். பார்வதி சிவனாரின் தவத்தைக் கலைக்க காமன் எனும் மன்மதன் மூலமாகச் சிவன் மீது கரும்பு வில்லில் பூட்டப்பட்ட பூக்களால் ஆன அம்பால் எய்ய சிவனார் சினமுற்று காமனை எரித்து விடுகின்றார். ரதி சிவனிடம் அழுது புலம்பி வேண்ட மன்மதனை உயிர்ப்பிக்கும் கதையைக் கூறினர். அந்தத் திருவிழா ஒரு வாரம் விமரிசையாக நடக்கும் எனவும் ஆண்களே ரதியாகப் பெண் வேடம் இட்டு இரவு ஏழு மணிக்கு மேல் விடிய விடியத் தெருக்கூத்து நடக்கும் எனக் கூறினர்.

காமன் கோவிலில் உள்ள சிவலிங்கத்தைக் காட்டி இங்குச் சிவன் கோயில் மற்றும் பெருமாள் கோயில் இருக்கா? என்று வினவ.. பெருமாள் கோயில் எப்போதோ அழிந்துவிட்டது சார், சிவன் கோயில் மட்டும் ஊருக்குக் கடைசில இருக்கு போய்ப் பாருங்க என்று கூறினர். சிவன் கோயிலில் சிறுவர்கள் அம்மன் கரகம் எடுப்பது போல விளையாடிக் கொண்டு இருந்தனர்.



www.heritager.org



மூலவரும் கோயில் பின்புறம் வரிசையாக இருக்கும் சிவலிங்கங்களும் பூமியின் அடியிலிருந்து எடுக்கப்பட்டது என்று கிராமத்தார் கூறினர்.

அக்காலத்தில் காவல் தெய்வம் என்று முனியப்பனையோ அன்றி எல்லை அம்மன் என்றோ சிறு கோயிலை அமைப்பர். அக்கடவுள் ஊருக்குள் தீமை நடக்காமல் பார்த்துக்கொள்ளும் என்ற நம்பிக்கையில். அதுபோல இந்தக் கிராமத்தில் ஏதாவது கோயில்.. என நானிழுக்க.. இருக்கு சார். ஊருக்கு வடக்கிலயும் தெற்கிலயும் எல்லைப் பிடாரி ஆத்தா கோயில் இருக்கு சார் என்றனர். சிறுவர்கள் ஊரின் இரு எல்லைகளிலும் இருந்த இரு செவ்வக கற்களைக் காட்டினர். எந்திரம் போன்ற அமைப்பில் கட்டங்களும் சூலங்களுமாக வெட்டப்பட்டிருந்தது. இவைகளை எல்லைப் பிடாரி ஆத்தா என்று அழைக்கின்றனர். மாட்டுப் பொங்கல் அன்று பூசைகள் நடக்குமாம். ஒருவேளை கோமரிக்கல்லாக இருக்குமோ..?

சிவன் கோயிலுக்குச் செல்லும் வழியே ஒரு கனக தண்டு மாரியம்மன் கோயில். இங்கும் ஏதாவது கிடைக்காதா என்று எட்டிப் பார்த்தால், அம்மனின் எதிரே போத்துராஜா நிற்கின்றார். சாதாரணமாகத் திரௌபதி அம்மனின் கோயிலில் காணப்படும் இவர் எப்படி இங்கு வந்தாரெனப் புலப்படவில்லை. இவருக்கு ஒரு சில நூறு வருடங்களே இருக்கலாம்.

இவைகளைக் காணும்பொழுது சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்பு தன் வரலாற்றைத் தொலைத்த இக்கிராமம் சைவம், வைணவம் மற்றும் சமணம் என தழைத்து ஓங்கி இருந்திருக்கும். வேதங்களும், கோயில் மணி சப்தங்களுமாக எவ்வளவு சிறப்பு பெற்று இருந்திருக்கும்? ஒரு கால சக்கரம் இருந்து, மீண்டும் நாம் அக்காலத்திற்குச் செல்ல முடிந்தால்.....





# மாவடைப்பு பெருங்கற்கால சின்னங்கள்..
## – குமாரவேல் ராமசாமி



மேற்கு தொடர்ச்சி மலைத்தொடரில் திருப்பூர் மாவட்ட ஆனைமலை வனச்சரகத்தின் எல்லையில் அமைந்துள்ள கிராமம் மாவடைப்பு. இங்கு பாறை ஓவியங்கள் இருப்பதை திரு KT.காந்திராஜன் அவர்கள் எட்டு ஆண்டுகளுக்கு முன்பு கண்டறிந்து வெளிப்படுத்தியுள்ளார். பாறை ஓவியங்களை காண நானும், நண்பர் சுதாகரும் கடந்த 19/12/2018 புதன்கிழமை கோவையில் இருந்து பயணித்தோம்.

பொள்ளாச்சி வழியாக வால்பாறை ரோட்டில் இருபத்திரெண்டாவது கொண்டை ஊசி வளைவின் சற்று முன்பாக இடப்புறம் காடாம்பாறை மின்நிலையத்திற்கு செல்லும் சாலையில் உள்ள வனச்சரக சோதனைச் சாவடியில் முறையாக அனுமதி பெற்றுக்கொண்டு மேல் ஆழியார் அணைக்கு செல்லும் வழியில் பயணித்தோம்.இந்த அணை மின்சார உற்பத்திக்காக மட்டும் பயன்படுத்தப்படுகிறது.

மேல் ஆழியார் அணைக்கு சற்று முன்பாக இடதுபுறம் திரும்பும் சாலையில் 20 கிலோ மீட்டர் தூரம் வனத்தினூடே பயணித்து மாவடைப்பு கிராமத்தை அடைந்தோம்.

பெரிய மாவடைப்பு கிராமத்தை அடைந்த உடன் ஊர் தலைவரிடம் சென்று நாங்கள் வந்ததன் நோக்கத்தை கூறியவுடன் ஊரில் உள்ள இரண்டு இளைஞர்களை அழைத்து பாறை ஓவியங்கள் உள்ள இடத்திற்கு வழிநடத்த அனுப்பி வைத்தார்.

கிராமத்தில் இருந்து தென்கிழக்காக இரண்டு கிலோமீட்டர் தூரம் பயணித்து பாறை ஓவியங்கள் உள்ள கனியாழை என உள்ளூர் மக்களால் அழைக்கப்படும் குகையினை அடைந்தோம்.

பெரியமாவடைப்பு பாறை ஓவியங்கள்:

தொல் பழங்கால அல்லது வரலாற்றுக் காலத்திற்கு முந்தைய மக்களின் பண்பாடு சார்ந்த வரலாற்றினை அறிய பாறை ஓவியங்களே முதன்மை தொல்லியல் சான்றாக அமைகின்றன.

மாவடைப்பு பாறை ஓவியங்கள் அமைந்துள்ள குகை மேற்கு முகம் பார்த்ததாக அமைந்துள்ளது.





இங்கு பெருங்கற்காலத்தைச் சேர்ந்த வெள்ளைநிற பாறை ஓவியங்கள் கிடைக்கின்றன. வெள்ளை நிற பாறை ஓவியங்கள் 4000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம் என்பது அறிஞர்களின் கருத்தாக உள்ளது. இங்குள்ள பழமையான ஓவியங்களின் மீது மிக சமீபத்திலும் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இதனால் பழமையான ஓவியங்களை அதிக அளவில் நம்மால் அடையாளப் படுத்த முடியவில்லை.

மாவடைப்பு பாறை ஓவியங்களின் கருப்பொருள்:

ஒரு வட்டத்தினுள் மனிதர்கள் குழுவாக இருப்பது போன்ற ஓவியங்கள் வரையப்பட்டுள்ளது. அதற்கு கீழேயும் சில மனிதர்களின் உருவங்கள் வரையப்பட்டுள்ளதையும் நோக்கும்போது அப்பகுதியில் மனிதர்கள் குழுவாகவும் ஒற்றுமையாக வாழ்ந்த நிலையினை யூகிக்கமுடிகிறது.

அடுத்த தொகுப்பில் சூரியனும் அதன் தொடர்ச்சியாக சில குறியீடுகளும் வரையப்பட்டுள்ளன. இதுகுறித்து ஆய்வு தேவை.

புலி ஒன்று மானை வேட்டையாட தயார் நிலையில் இருப்பது போன்றக் காட்சியும் காணமுடிகிறது. இதில் புலியும் மானும் பாய்ச்சலில் உள்ளது போல தத்ரூபமாக உருவங்கள் வரையப்பட்டுள்ளது.

சில மனித உருவங்களும் ஆங்காங்கே சில விலங்குகளின் உருவங்களையும், பாதி அழிந்த நிலையிலும், சில குறியீடுகளையும் பார்க்க முடிந்தாலும் அது குறித்து முழுமையாக நம்மால் அடையாளம் காண முடியவில்லை.

இங்குள்ள தொல் பழங்கால ஓவியங்களின் மீது சமீபத்தில் வரையப்பட்ட ஓவியங்களிலும் மான், புல, யான, மயில், மனித உருவத்தை மிகைப்படுத்தி வரைதல் போன்ற தொல்பழங்கால ஓவியங்களில் காணப்படும் காட்சிகளையே வரைந்துள்ளனர்.

பாறை ஓவியங்களை பார்த்து புகைப்படங்களை எடுத்துக்கொண்டு பின்னர் எங்களுடன் வழிகாட்டியாக வந்த உள்ளூர் நண்பர்களான சத்தியமூர்த்தி மற்றும் அவருடைய நண்பர்களிடம் இந்த ஓவியங்களின் சிறப்புகளையும் அவற்றைப் பாதுகாக்க வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினோம்.

நண்பர்களுடனான உரையாடலில் அங்கு வனத்தில் பழங்குடிகள் வழிபடும் பழமையான



கோயில் இருப்பதை அறிந்து அவர்களை வழிநடத்த கூறினோம். ஊர் பெரியவர்களின் அனுமதி இல்லாமல் கோயிலுக்குள் யாரையும் அழைத்து செல்ல முடியாது என அவர்கள் கூறியதால், மீண்டும் தலைவரிடம் பேசி அனுமதி பெற்று பின்னர் கோயிலை அடைந்தோம். அடர்ந்த வனத்தில் இயற்கையாக உருவாகும் ஊற்றுகளும், நீரோடைகளுக்கும் இடையில் ஓங்கி வளர்ந்த மரங்களுடன் குளிர்ச்சியான இயற்கை சூழலில் அமைந்துள்ள கோயிலில் கற்கால கருவிகளை மக்கள் தங்கள் குலதெய்வமாக வழிபட்டுவருவதை அறிந்து கொண்டோம்.

பின்னர் அங்கிருந்து புறப்பட்டு பெரிய மாவடைப்பு கிராமத்திற்கு வந்தவுடன் ஊர் தலைவரின் சகோதரர் சரவணனுடன் உரையாடிய போது பேச்சுவாக்கில் இப்பகுதியில் பாண்டவர் வீடு/பாண்டி மேடு/குள்ள மனிதர்கள் வீடு (உள்ளூர் வழக்கில் பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் அழைக்கும் முறை)என அழைக்கப்படும் பகுதி ஏதேனும் உள்ளதா என வினவ!!

அவரும் மூன்று திசைகளில் கைகாட்டி ஒவ்வொரு திசையில் இருக்கும் மலைப் பகுதியிலும் இருபது, முப்பதுக்கு மேற்பட்ட இடங்களில் இருப்பதாக கூறியவுடன் ஆர்வம் மேலிட அவரை வழிநடத்த வேண்டினோம்.அவருடன் நாங்களும் சென்று ஊர் தலைவரிடம் மீண்டும் அனுமதி பெற்று அந்த இடத்திற்கு பயணித்தோம்.

மாவடைப்பு பெருங்கற்கால கற்திட்டைகள்:

மாவடைப்பு பாறை ஓவியங்கள் உள்ள உறைவிடப் பகுதியிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரம் வடகிழக்காக பயணித்து பெருங்கற்காலக் கல் திட்டைகள் உள்ள குன்றினை அடைந்தோம்.

நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பெருங்கற்கால நாகரிக காலத்தில் வாழ்ந்த மனிதர்கள் தம் முன்னோர்கள் இறக்கும் போது அவர்களை புதைத்த இடத்திலோ அல்லது அவர்களின் எலும்பு மற்றும் அவர்கள் பயன்படுத்திய பொருட்களை வைத்து நினைவுச் சின்னங்கள் அமைத்தனர்.

இவ்வகை நினைவுச் சின்னங்கள் பல்வேறு முறைகளில் அமைத்தாலும் மலை சார்ந்த பகுதிகளில் வாழ்ந்த மனிதர்கள் நான்கு புறங்களிலும் பலகைகளை நிறுத்தி அதன் மேல் மூடுகல்லை(Cap-stone) வைத்து



கல்லறை போன்ற அமைப்பினை ஏற்படுத்தியுள்ளனர். இதனை கல்திட்டைகள் *(Dolmonid-cist)* என்பர்.

இப்பகுதியில் *30*க்கும் மேற்பட்ட கல்திட்டைகள் ஒரு இடத்தில் இருப்பதை பார்க்க முடிகிறது. சில கற்திட்டைகள் *3* மற்றும், நான்கு அறைகளுடன் கூடிய பிரம்மாண்ட அமைப்பாகவும் உள்ளன. இங்கு உள்ள கற்திட்டைகள் அனைத்தும் கிழக்கு முகம் பார்த்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது.

இங்குள்ள கற்திட்டைகள், கற்திட்டைகளின் நிலம் என அழைக்கப்படும் மறையூர் *(Land of Dolmen,Marayoor, Kerala.)* பகுதியில் இருப்பதை போலவே அமைப்பிலும் எண்ணிக்கையிலும் பிரம்மாண்ட அளவில் இருந்தாலும் பெரிய அளவில் ஆய்வுக்கு உட்படுத்தாமலும், பாதுகாக்கப்படாமலும் கவனிப்பின்றி அழியும் நிலையில் இருப்பது வேதனையான விஷயம்.

எங்களுடன் வழிகாட்டியாக வந்த சரவணகுமார் அண்ணனிடம் இந்தக் கற்திட்டைகள் குறித்து கேட்டபோது, "ரொம்ப ஆண்டுகளுக்கு முன்னர் இப்பகுதியில் வாழ்ந்த மனிதர்கள் விவசாயம் செய்யும்போது இரை தேடி வரும் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் இரை கிடைக்காத வகையில் வேலியிட்டு பயிர் வளர்த்தனர். பறவைகளையும் விலங்குகளையும் துன்புறுத்தியும் தானியங்கள் தங்களுக்கு மட்டுமே கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் வாழ்ந்து வந்ததாகவும் அதன் சாபத்தால் அப்பகுதி மக்கள் மொத்தமாக அழிந்து போனதாகவும், இது அவர்களின் ஈமகாடு "என தங்கள் முன்னோர்கள் கூறியதாக எங்களிடம் தெரிவித்தார். இது கதை என்றாலும் மனிதர்களுக்கு மட்டுமே உணவு தேவை முக்கியமல்ல இயற்கையில் அனைத்து உயிரினங்களுக்கும் பகுத்து வாழ்தலே இயற்கையின் சமன்நிலை என்ற புரிதலை அடுத்தடுத்த தலைமுறைக்கு உணர்த்தி உள்ளனர் என்பதை புரிந்துகொண்டோம்.

பாறை ஓவியங்கள், ஈமச்சின்னங்கள் , பழங்குடி மக்களின் கோயில், கற்கருவிகள் என பயணித்து பல தகவல்களை அவரிடம் கேட்டு தெரிந்து கொண்டபின் நடுகற்கள் ஏதும் இருக்கிறதா? என கேட்டு அவர்களுக்கு எளிதில் விளங்கும் வகையில் எங்களிடம் உள்ள



ஆமாம், அய்யன் கோயில் என நாங்கள் கும்பிடும் குல சாமி சிலை நீங்கள் கேட்பது போல தான் இருக்கும் என அவர் சொல்ல அந்த இடத்திற்கும் சென்று பார்த்தோம். அது நடுகல்/ நினைவுக்கல்(யானைக்குத்திப் பட்டான் கல்) வகையை சார்ந்த சிற்பம்.யானையை அடக்கும் போது இறந்த வீரனின் நினைவாக எடுப்பிக்கப்பட்ட நடுகல்லாக இருக்கலாம். பொ யு 18ம் நூற்றாண்டை சேர்ந்ததாக கருதலாம்.

அப்பகுதியில் உள்ள 100 ஆண்டுகள் பழமையான மாமரத்தின் அடியில் இருந்த நடுகல் காட்டு யானைகள் தொடர்ந்து தாக்கியதில் சேதம் ஏற்பட்டதால் மேடான பகுதியில் கோயில் கட்டி வைத்துள்ளனர். வருடத்திற்கு ஒரு முறை மாசி மாதத்தில் ஒரு வார காலம் அய்யன் கோயிலுக்கும் (நடுகல்),பழங்குடிகள் கோயிலுக்கும் நோம்பி சாட்டுவதாக தெரிவித்தார்.

மாவடைப்பு கிராம மக்களின் முக்கிய தொழிலாக விவசாயமும், கால்நடை மேய்த்தலும் இருந்து வருகின்றது. தற்போது பரவலாக தட்டை பயிர் விதைக்கப்பட்டு களையெடுப்பு பணிகள் நடைபெற்று வருகின்றன.கால்நடைகள் கலப்பின வகைகளாக தென்பட்டன. ஏதும் தனி இனமாக அடையாளப் படுத்த முடியவில்லை. தைலப்புல் சேகரித்தல்,தேன் சேகரிக்கும் தொழிலையும் செய்து வருகின்றனர்.

அன்றைய நாள் முழுவதும் இயற்கைச் சார்ந்த வரலாற்றுத் தேடல்,அம்மக்களின் பண்பாடு சார்ந்த உரையாடல்கள் என எங்களை வழிநடத்திய நண்பர் சரவணகுமார், நண்பர்கள் சத்தியமூர்த்தி, நாகராஜ் மற்றும் எங்கள் மீது நம்பிக்கை வைத்து அனைத்து உதவிகளையும் செய்த ஊர் தலைவர் காளியப்பன் அண்ணன் என அனைவருக்கும் நன்றியை தெரிவித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டோம்.



# கீழடி சில வரலாற்று தகவல்கள்..

முனைவர். ஜோ. பிரின்ஸ்
அமெரிக்கன் கல்லூரி, மதுரை

படங்கள்: தமிழகன் இராஜசேகர்

கீழடி பல்லாயிரம் ஆண்டுகள் பழமையான தமிழர் கட்டடங்கள்

கீழடி தொல்லியல் களம் என்பது இந்தியத் தொல்லியல் ஆய்வு நிறுவனத்தால் அகழாய்வு செய்யப்பட்டு வரும் ஒரு சங்க கால வசிப்பிடம் ஆகும். இந்த அகழாய்வு மையம் தமிழ்நாட்டில் மதுரைக்குத் தென்கிழக்கில் 12 கி.மீ தொலைவில், சிவகங்கை மாவட்டத்தில் கீழடி என்ற ஊருக்கு அருகில் அமைந்துள்ளது. ஆதிச்சநல்லூர் தொல்லியல் களத்துக்கு அடுத்து இந்தியத் தொல்லியல் ஆய்வு நிறுவனத்தால் தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்படும் பெரிய அளவிலான அகழாய்வு இதுவேயாகும்.இது வைகைகரையில் உருவான தமிழர் கலாச்சாரத்தை வெளிக்கொணர்கிறது. இது சுமார் 3000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானது என அங்குக் கண்டுபிடிக்கப்பட்ட ஆபரணங்கள்மூலம் காணலாம்.இது பாண்டிய சாம்ராஜியத்தின் எச்சங்கள் ஆகும். இந்த அகழ்வாய்வு சிந்து வெளிநாகரத்திற்கும் முந்தையது.

மதுரையிலிருந்து இராமநாதபுரத்தின் - அழகன்குளம் துறைமுகத்துக்குச் செல்லும் பண்டைய வணிகப் பாதையில், சிவகங்கை மாவட்டத்தில் உள்ள கீழடி என்ற ஊரின் கிழக்கே சுமார் ஒரு கி.மீ தொலைவில், மணலூர் கண்மாயின் மேற்கரையில் உள்ள பள்ளிச்சந்தைத் திடல் என்ற பெயரிலான மண்மேட்டில் இவ்வகழாய்வு தொடங்கப்பட்டது. இவ்விடத்தைச் சுற்றி நிலத்தை உழும்போது பல்வேறு தொல்லியல் எச்சங்கள் கிடைத்துவந்த நிலையில், தரைமட்டத்திலிருந்து இரண்டரை மீட்டர் உயரத்தில் அவ்வளவாகப் பாதிப்புக்குள்ளாகாது இருந்த இம்மேடு ஆய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது. தற்பொழுது அகழாய்வு செய்யப்பட்டுவரும் இடம் 3.5 கி.மீ சுற்றளவுடன் 80 ஏக்கர் பரப்பளவில் விரிந்துள்ளது. தொன்மையான ஊர்களான கொந்தகை, மணலூர் ஆகியவையும் இப்பகுதியோடு தொடர்ச்சியுற அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

முதற்கட்டமாக, இந்க் களம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி பத்தாம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியைச் சேர்ந்த வசிப்பிடமாகக் கணிக்கப்பட்டது. மேலதிக உறுதிப்படுத்தல்களுக்காக இந்த அகழ்வாயிலிருந்து இரண்டு மாதிரிகள் (samples) கரிமத் தேதியிடல் முறையில் பகுப்பாய்வு செய்ய அனுப்பப்பட்டது. சூலை 2017 இல் வெளிவந்த இதன் முடிவுகள் இந்த மையம் சுமார் 2,200 ஆண்டுகளுக்கு முன்னையது என்பதை உறுதிசெய்துள்ளன.

வைகையாறு தோன்றும் தேனி மாவட்டம்



கீழடி ஆய்வு தளத்தை பார்வையிடும் தமிழ் இளைஞர்கள்

தொடங்கி கடலில் கலக்கும் இராமநாதபுரம் மாவட்டம்வரை வைகை ஆற்றங்கரையின் அருகாமை பகுதிகளில் 2013-14இல் நடத்தப்பட்ட தொல்லியல் ஆய்வுகளின்போது தொல்லியல் எச்சங்களுள்ள 293 பகுதிகள் கண்டறியப்பட்டன. இவை களஞ்சியங்கள், வணிகத் தலங்கள், துறைமுகங்கள், வாழிடங்கள், கோயில்கள் என்ற வகையிலானவை. வருசநாட்டிலும், அழகன்குளத்திலும் சிறிய அளவிலான அகழாய்வுகள் செய்யப்பட்டிருந்தன. ஆனால் பெரிய அளவிலான அகழாய்வுகள் இதுவரை நடந்திருக்கவில்லை. இந்நிலையில் பெங்களூருவில் உள்ள இந்திய தொல்பொருள் ஆய்வு துறையின் அகழாய்வுப் பிரிவு-6, மார்ச் 2015 தொடங்கி இப்பகுதியில் ஆய்வு நடத்திவருகிறது.

கீழடி அகழாய்வினை இந்தியப் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் அகழாய்வுப் பிரிவு முன்னெடுக்கின்றது. அப்பிரிவினைச் சார்ந்த கி. அமர்நாத் ராமகிருஷ்ணன் கண்காணிப்பு தொல்பொருளியலாளராகத் தலைமை தாங்கினார். கல்வெட்டியலாளர் வி. வேதாசலம் துறைசார் வல்லுனராகக் (Subject Matter Expert) கடைமைபுரிகிறார். கிட்டத்தட்ட 48 சதுரக் குழிகள் வெட்டப்பட்டு உறைக்கிணறுகள், செங்கற் சுவர்கள், கூரை ஓடுகள், மண்பாண்டங்கள், மிளிர்கல் அணிகலன்கள், எலும்புக் கருவிகள், இரும்பு வேல், தமிழி எழுத்து பொறிக்கப்பட்ட பானையோடுகள் எனப் பல்வேறு தொல்லெச்சங்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இலக்கியத்தில் குறிப்பிடப்படும் பாண்டியர்களின் தொல்நகரான "பெருமணலூர்" இதுவாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

கீழடியில் 10 க்கும் மேற்பட்ட கட்டிடங்கள் கண்டறியப்பட்டுள்ளன. ஒரு வளர்ச்சியடைந்த நகரமாக இது திகழ்ந்ததற்கு இது வலுவான சான்றாக உள்ளது. "சங்க காலத்தில் கட்டிடங்களே இல்லை" என்ற கூற்றை இந்த அகழ்வாய்வு மாற்றியமைத்துள்ளது.

சுடுமண் குழாய், கழிவுநீர் தொகுதிகள்

நீர் வழங்கலும், கழிவுநீர் அகற்றலும் நாகரிக வளர்ச்சியின் முக்கிய மைல்கற்களாகக் கருதப்படுவன. கீழடியில் சுடுமண் குழாய்மூலம் உருவாக்கப்பட்ட கழிவுநீர் கால்வாய் வசதியுடன் கட்டிடங்கள் இருந்தது கண்டறியப் பட்டுள்ளன.

உறைக் கிணறுகள்

இங்குப் பழங்கால சுடுமண் உறைக்கிணறுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை பட்டினப்பாலை கூறும் உறைக்கிணற்றுப் புறச்சேரி என்ற தொடருக்குச் சான்று பகர்வனவாகவும், ஆற்றங்கரைகளிலும், பெரிய குளக்கரைகளிலும் இவ்வாறு உறைக்கிணறுகள் அமைத்து நீரெடுக்கும் தமிழரின் பண்டைய வழக்கத்தை எடுத்துக்காட்டுவனவாகவும் உள்ளதாகத் தொல்லியல் அறிஞர் வெ. வேதாசலம் குறிப்பிடுகிறார்.



கழிவறை அமைப்பு



பானை ஓடுகள்



உரைகிணற்று பகுதிகள்

ஆய்வாளர்கள் கூடாரம்

மண்பாண்டம்:

ரோமப் பேரரசுடன் கொண்டிருந்த வணிகத் தொடர்பை மெய்ப்பிக்கும்படியான, வணிகர்களால் கொண்டுவரப்பட்ட ரௌலட் (rouletted), அரிட்டைன் (arretine) வகை மண்பாண்டங்கள் கிடைத்துள்ளன.

அழகங்குளத்திலும் இத்தகைய பாண்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. மேலும் வரலாற்றின் தொடக்ககாலத்தைச் சேர்ந்தவையான கருப்பு, சிவப்பு மண்பாண்டத் துண்டுகள், வெள்ளை வண்ணம் பூசப்பட்ட கருப்பு, சிவப்பு மண்பாண்டத் துண்டுகள், செம்பழுப்பு நிற கலவை பூசப்பட்ட மண்பாண்டத் துண்டுகள் ஆகியவையும் கிடைத்துள்ளன.

தமிழகத்தில் செம்பழுப்பு நிற ரசட் (russet) கலவைப் பூசப்பட்ட பாண்டங்கள் இதுவரை கொங்குப் பகுதியிலேயே கிடைத்திருப்பதைக் கொண்டு இப்பகுதி கொங்குப் பகுதியுடனும் வாணிபத் தொடர்பிலிருந்ததாகக் கருதப்படுகிறது.

தமிழி எழுத்துக்கள்

ஆதன், உதிரன், திசன் போன்ற தனிநபர்களின் பெயர்களைக் குறிப்பிடும் தமிழ்எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மண்பாண்ட ஓடுகளும் கிடைக்கப்பெற்றுள்ளன.

அணிகலன்கள்

இங்குச் சூது பவளம், பளிங்கு, அகேட் மணிகள், பச்சை, மஞ்சள், நீல நிறக் கண்ணாடி மணிகள் ஆகியவையும் கிடைத்துள்ளன. யானைத் தந்தத்தினாலான தாயக்கட்டைகள், தாமிரத்தாலான கண் மைத்தீட்டும் கம்பி ஆகியவையும் கிடைத்துள்ளன.

அரிய தொல்பொருட்கள்.

இரும்பாலான அம்பு முனைகள், எழுத்தாணி, சுடுமண் முத்திரை கட்டைகள், தந்தத்தால் ஆன தாயக் கட்டைகள், சுடுமண் பொம்மைகள் உட்பட்ட பல்வேறு அரிய தொல்பொருட்கள் கிடைத்துள்ளன.

கீழடி அகழாய்வின் கால வரிசை

முதல் கட்டம்

கீழடியில் சூன், 2015 ஆம் ஆண்டு வைகை ஆற்றங்கரையை ஒட்டிய பகுதிகளில், இந்தியத் தொல்லியல் ஆய்வகத்தின் கண்காணிப்பாளர் கி. அமர்நாத் ராமகிருஷ்ணன் தலைமையிலான குழு முதல் கட்ட அகழ்வாய்வைத் தொடங்கியது.

இரண்டாம் கட்டம்

2 சனவரி 2016 ஜனவரி அன்று இரண்டாம் கட்ட அகழாய்வு தொடங்கியது. இதில் மருத்துவ குடுவைகள், பழங்கால உறைக் கிணறுகள், தொழிற்சாலை, அரசு முத்திரை உள்ளிட்ட பல்வேறு ஆவணங்கள் கிடைத்தன. இரண்டாம் கட்ட அகழாய்வின் முடிவில் 6 ஆயிரத்துக்கும் மேற்பட்ட பொருள்கள் கிடைத்தன. இவற்றை ஆய்வுக்கு உட்படுத்தியபோது 2,200 ஆண்டுகளுக்கு முந்தைய கால கட்டத்தைச் சேர்ந்தவையென உறுதி செய்யப்பட்டுள்ளது.

மூன்றாம் கட்டம்

மூன்றாம் கட்ட அகழாய்வு சனவரி, 2017 முதல் தொல்லியல் துறை கண்காணிப்பாளர் ஸ்ரீராமன் தலைமையில் நடைபெறுகிறது. இப்பணி 30 செப்டம்பர் 2017ல் முடிகிறது. மூன்றாம் கட்டப் பணியில் 400 சதுர மீட்டர் அளவுக்கு 16 குழிகள் தோண்ட இடம் தேர்வு செய்யப்பட்டுள்ளது.

கீழடியில் 4வது கட்ட அகழாய்வு

கீழடியில் 4வது கட்ட அகழாய்வு கடந்த ஏப்ரல் முதல் செப்டம்பர் வரை நடத்தி முடிக்கப்பட்டது. கீழடி அகழாய்வில் தங்க ஆபரணங்கள் கிடைத்துள்ளன. 4வது கட்ட அகழாய்வில் கீழடியிலிருந்து பழமையான 7,000 பொருட்கள் கிடைத்தன. பழங்கால விலங்குகளின் எலும்புகள், மீன் உருவம் பொறித்த பானைகள் கிடைத்துள்ளன. சிந்து, கங்கை நதிக்கரை நாகரிகத்திற்குப் பின், இரண்டாம் நிலை நகர நாகரிகங்கள், தமிழகத்தில் தோன்றவில்லை என்ற கருத்துக்கு மாறாய், வைகை கரை நாகரிகம் சிறந்து விளங்கியதற்கான சான்றுகள், இந்திய தொல்லியல் துறையினர் நடத்திய, கீழடி அகழாய்வில் கிடைத்துள்ளன.

தொல்லியல் மேடுகள்

மதுரையில் இருந்து, கிழக்கே, 15 கி.மீ., தொலைவில், சிவகங்கை மாவட்டத்தில் உள்ள கீழடியில், 110 ஏக்கர் பரப்பளவில் இரண்டு தொல்லியல்மேடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. 2015 முதல், தற்போது வரை, 102 குழிகள் அமைத்து ஆய்வு செய்ததில், உறைக்கிணறுகள், சுட்டச் செங்கல் சுவர், சுடுமண் கூரை ஓடுகள், தொழிற்சாலைக்குப் பயன்படும் இரண்டடுக்கு வெப்ப உலைகள் உள்ளிட்டவற்றுடன், 3,000க்கும் அதிகமான தொல்பொருட்களும் கிடைத்தன. அவற்றில், சுட்டச் செங்கற்களால் ஆன, திறந்த மற்றும் மூடிய கால்வாய், சுடுமண் உறை கால்வாய், செங்கல் தொட்டி ஆகியவற்றை, ஆய்வாளர்கள் மிக முக்கிய சான்றுகளாகக்கருதுகின்றனர்.



கட்டடப் பகுதி



கழிவுநீர் வாய்க்கால்

இதுகுறித்து, இந்திய தொல்லியல் துறையின் தென் மண்டல கண்காணிப்பாளரும், கீழடி தொல்லியல் ஆய்வாளருமான, கி.அமர்நாத் ராமகிருஷ்ணன்கூறியதாவது: "கீழடி தொல்லியல் மேடு அமைந்துள்ள, 4.5 கி.மீ., துாரத்தையும், அறிவியல் முறையில் கட்டம் அமைத்து, ஆய்வு மேற்கொண்டு, ஆய்வு முடிவுகளை ஒப்பீடு செய்யும் வகையில், ஆவணப்படுத்திவருகிறோம்.

இது, தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட மிகப்பெரிய அகழாய்வு. இரண்டு கட்டமாக நடத்தப்பட்ட அகழாய்வில், முழுமையான சான்றுகள் கிடைக்கவில்லை; முழுமையான ஆய்வுக்குப் பிறகே, கட்டடங்கள்பற்றிய தகவல்களை அறிய முடியும்.

இந்த மேட்டில், 4.5 மீ., ஆழத்திற்குள், மூன்று வித மண் அடுக்குகள் கிடைக்கின்றன. அதில், முதல், 3 மீ., ஆழத்தில் மேம்பட்ட நாகரிக காலப்பொருட்களும்; 3 மீ., முதல், 4.5 மீ., ஆழத்தில் இரும்பு காலப் பொருட்களும்; 4.5 மீ., முதல், 6 மீ., ஆழத்தில் கன்னி மண்ணும்; 6 மீ., ஆழத்திற்குப் பின், 12 மீ., வரை, ஆற்று மணலும் இருக்கின்றன. அதனால், அந்தப் பகுதியில், வைகை ஆறு பாய்ந்திருக்கலாமென, கணிக்க முடிகிறது."

மரத்துாண்கள்

இங்குள்ள கட்டடங்களில், 36 : 22 : 6, 34 : 21 : 5, 35 : 22 : 6, 32 : 21 : 5 செ.மீ., அளவுள்ள செங்கற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இரண்டு துளையிடப்பட்ட சுடுமண் ஓடுகள், ஆணிகள்மூலம் வேயப்பட்டுள்ளன. கூரைகளைத் தாங்க, மரத்துாண்களை அக்கால மக்கள்அமைத்துள்ளனர். அவற்றுக்கான குச்சிநடு குழிகள், பல்வேறு ஆழத்தில் அமைந்துள்ளன. கிடைத்துள்ள மண்பாண்டங்கள், அணிகலன்கள் உள்ளிட்ட பொருட்களை, சி 14 ஆய்வுக்கு உட்படுத்தி, காலக்கணிப்பு செய்ய வேண்டி உள்ளது. இந்த ஆய்வு, வரலாற்றில் திருப்புமுனையாக அமைய வாய்ப்பு உள்ளது. இவ்வாறு அவர்கூறினார்.

அகழாய்வில் கிடைத்தது என்ன?

ரவுலட் பானை ஓடுகள், தமிழ் பிராமி எழுத்துக்களுடன் கூடிய, கருப்பு, சிவப்பு, செம்பழுப்பு நிற பானை ஓடுகள், கண்ணாடி, கல்மணிகள், சங்கு வளையல்கள், சுடுமண் பொருட்கள், தந்தத்தால் ஆன பொருட்கள், முத்திரை, செம்பு ஆபரணங்கள், இரும்பு ஆயுதங்கள் ஆகியவை கிடைத்துள்ளன. 10 சங்க கால நாணயங்களும், கி.பி., 10ம் நுாற்றாண்டைச் சேர்ந்த, சோழர் கால நாணயங்களும் கிடைத்துள்ளன

கீழடி அகழாய்வின் தொல்பொருட்களைப் பாதுகாக்க, அதே பகுதியில், அருங்காட்சியகம் அமைக்க வேண்டும் என, கிராம மக்கள், தமிழக அரசுக்குக் கோரிக்கைவிடுத்துள்ளனர்.

கதை சொல்லும் நாணயம்

நாணயங்களின் புகைப்படத்தைப் பார்த்தபின், தென்னிந்திய நாணயவியல் சங்கத் தலைவர் கூறிய கருத்து: இவை, சங்ககால எழுத்துள்ள நாணயங்கள். இவற்றைச் சுத்தப்படுத்தினால், எழுத்துக்களைப் படிக்க முடியும். மன்னரின் பெயர் இருந்தால், அது, மிகச் சிறப்பான வரலாற்றுச் சான்றாக அமையும். கீழ் புறம் வெட்டப்பட்ட செவ்வக நாணயம் இது, தொன்மையான செம்பு முத்திரை நாணயம். நாணயத்தின் ஒரு மூலையில், இதுபோல் வெட்டப்பட்டிருந்தால், அது முத்திரை நாணயத்திற்கான அடையாளம். இது, கி.மு., மூன்று அல்லது நான்காம் நுாற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

சிவகங்கை மாவட்டம், திருப்புவனத்திற்கு அருகில் உள்ள கீழடியில் மத்திய அரசின் தொல்லியல் துறை கடந்த 2014 ஆம் ஆண்டு முதல் மூன்று கட்டங்களாக அகழ்வாராய்ச்சியை நடத்தியது. கீழடி பள்ளிச் சந்தைத் திடலில் காணப்படும் தொல்லியல்



கழிவுநீர் வாய்க்கால்



சங்ககாலச் செங்கல் சுவர்

மேடு 110 ஏக்கர் பரப்பளவு கொண்டது. இதில் வெறும் 50 சென்ட் நிலப்பரப்பில் மட்டுமே இதுவரையில் அகழ்வாராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுஇருக்கிறது. இந்த ஆய்வில் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 10 ஆம் நூற்றாண்டுவரை தமிழர்களின் நகர நாகரிக வாழ்க்கையை உறுதிப்படுத்தும் தடயங்கள் கிடைத்துள்ளன.

கீழடியில் நடந்த அகழ்வாராய்ச்சி வெறும் இரண்டு விழுக்காடு அளவு மட்டுமே; இரண்டு ஆண்டுக் கால ஆராய்ச்சியில் சுமார் 7 ஆயிரம் தொன்மையான பொருட்கள் கிடைத்திருக்கின்றன. கீழடி அகழ்வாராய்ச்சியில், ஆறு மீட்டர் தோண்டப்பட்ட தொல்லியல் குழிகளில் மூன்றாவது குழியில் எடுக்கப்பட்ட பொருட்களின் காலம் சுமார் 2 ஆயிரத்து 200 ஆண்டுகளுக்கு முந்தையது என்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இங்குக் கண்டெடுக்கப்பட்ட பொருட்களில் இரண்டை மட்டும் அமெரிக்காவின் புளோரிடாவில் உள்ள பீட்டா அனலடிக் என்ற நிறுவனத்திற்குக் கரிம பகுப்பாய்வுக்காக மத்திய அரசு அனுப்பிவைத்தது.

அமெரிக்க நிறுவனத்தின் கரிம பகுப்பாய்வு அளித்த அந்த முடிவுகளைக் கடந்த ஆண்டில், 2017 ஜூலை 28 ஆம் தேதி மத்திய கலாச்சாரத் துறை இணை அமைச்சர் மகேஷ் சர்மா, நாடாளுமன்றத்தில் தெரிவித்தார். அதில், கீழடி ஆழ்வாராய்ச்சிப் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட ஒரு பொருள் 2 ஆயிரத்து 160 ஆண்டுகளுக்கும், மற்றொரு பொருள் 2 ஆயிரத்து 220 ஆண்டுகளுக்கும் முற்பட்டவை. கரிம பகுப்பாய்வுச் சோதனையில் கீழடி நகர நாகரிகம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டார்

கீழடி அகழாய்வுக் களம்

நாங்கள் சென்றது ஞாயிற்றுக் கிழமையாதலால் அகழாய்வுக் களத்தில் பணியேதும் நடைபெறவில்லை. ஓரிரு பெண் பணியாளர்கள் இருந்தனர். ஆய்வுப்பணியில் உள்ள இளநிலை அலுவலர் ஒருவர் அங்கு வந்தார். நாங்கள் சென்ற நேரத்தில் மழை இல்லாவிடினும், அண்மையில் இப்பகுதியில் பெய்த மழை காரணமாகக் குழிகள் அனைத்தும் "தார்ப்பாலின்" போன்ற துணிகளால் மூடி வைக்கப்பட்டிருந்தன. இளநிலை அலுவலர் ஓரிரு குழிகளைத் திறந்து காட்டினார். ஒரு பகுதியில், பாத்தி பாத்தியாகப் பிரித்து ஆய்வுக்குழிகளில் எடுத்த பானைச் சில்லுகளைக் குவித்து வைத்திருந்தனர். ஒளிப்படம் எடுக்கத் தடை இருந்ததால் யாரும் ஒளிப்படம் எடுக்கவில்லை. காட்சிகளை மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

இளநிலை அலுவலர் கூறிய சில செய்திகள் வருமாறு:

தற்போதைய பணியின்போது, மொத்தம் முப்பத்தாறு ஆய்வுக்குழிகள் தோண்டப்பட்டுள்ளன. கீழடி கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு வரையிலான கால எல்லையைச் சேர்ந்த சான்றுகளைக் கொண்டுள்ளது. கீழடிப் பகுதி மக்களின் வாழ்விடமாக இருந்துள்ளது. தமிழ்நாட்டில் பெருப்பாலான பகுதிகளில் கிடைக்கும் கருப்பு சிவப்பு நிறப் பானை ஓடுகள் இங்கும் கிடைத்துள்ளன. இந்தக் கருப்பு சிவப்புப் பானைகளை 1500 வெப்ப அலகு வரையிலான வெப்பத்தில் சுட்டிருக்கிறார்கள். அப்போது, வைக்கோல் போன்ற எரிபொருளின் பயன்பாட்டால் கரிப்பொருள் படர்ந்து பானைகளின் உட்புறம் கருப்பு நிறத்தையும், வெளிப்புறம் சிவப்பு நிறத்தையும் பெற்றதாகக் கூறப்படுகிறது.

ஆய்வின்போது, உறைக் கிணறுகள் கிடைத்துள்ளன. (உறை கிணறுள்ள குழிகளைத்திறந்து எங்களுக்குக் காட்டினர்) வட்ட வடிவச் சுடுமண்ணாலான அந்த உறைகள் 90 செ.மீ. விட்டம் கொண்டவை. 180 செ.மீ. உயரம் கொண்டவை. ஆறு அடி ஆழத்துக்குள் அக்கால மக்களுக்கு நீர் கிடைத்துள்ளது. கீழடி வாழ்விடமென்றால். அருகில் உள்ள மணலூர் ஈமக்காடாக இருந்துள்ளது.

செங்கற்களாலான, நான்கடிக் கட்டுமானம் கிடைத்துள்ளது. செங்கற்கள், தற்போதுள்ள



தமிழரின் பெருமைக் கூறும் கட்டடக்கலை சான்றுகள்

செங்கற்கள் மூன்றினை உள்ளடக்கும் அளவு பரப்பில் பெரியவை. கீழடி நாகரிகம், "கார்பன் கணக்கீட்டு" முறையில் *2200* ஆண்டுகள் பழமை வாய்ந்தது என அறியப்பட்டுள்ளது. "கிரிஸ்டல்" (CRYSTAL), "அகேட்" (AGATE) ஆகிய வகைக் கற்களை ஆபரணக்கற்களாகப் பயன்படுத்தியுள்ளனர். சென்ற முறை நடந்த அகழாய்வின்போது, ஆதன், திஸன், சேந்தன் ஆகிய பெயர்கள் பிராமி எழுத்தில் பொறித்த பானை ஓடுகள் கிடைத்தன. தற்போதும் எழுத்துப்பொறிப்புள்ள பானைப்பகுதிகள் கிடைத்துள்ளன.

கொந்தகை என்னும் குந்திதேவிச் சதுர்வேதிமங்கலம்

கீழடியில் உள்ள அர்ச்சுனேசுவரர் கோயில் கல்வெட்டுகளில், தற்போது கீழடியை அடுத்துள்ள கொந்தகை என்னும் பெயரில் உள்ள கிராமம் கி.பி. *12-13*-ஆம் நூற்றாண்டில், குந்திதேவிச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயரில் வழங்கியது "வேளூர்க் குளக்கீழ் நாட்டுக் குந்திதேவிச் சதுர்வேதிமங்கலம்" என்பது கல்வெட்டு வரி.

இந்தக் குந்திதேவிச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர் காலப்போக்கில் சதுர்வேதிமங்கலம் என்னும் அடைமொழியை இழந்து மருவிக் கொந்தகையாக மாற்றம் பெற்றுள்ளது.

ஆய்வுப் பொறுப்புத் தலைமை அலுவலரான அமர்நாத் இராமகிருஷ்ணன், தொல்லியல் துறை அறிஞர்களான சாந்தலிங்கம், வேதாசலம் ஆகியோர் கீழடி ஆய்வு பற்றிப் பகிர்ந்துகொண்ட சில செய்திகளையும் காண்போம். ஒரு நதிக்கரை நாகரிகத்தைப் பற்றி விரிவாக ஆராய்வதன்மூலம் தமிழகத்தின் வரலாற்றை அறிய முடியும் என்ற நோக்கத்துடன் இந்த ஆய்வு தொடங்கப்பட்டது.

மதுரை, திண்டுக்கல், தேனி, சிவகங்கை, இராமநாதபுரம் ஆகிய ஐந்து மாவட்டங்களில், வைகை ஆறு தொடங்கும் வள்ளிமலையிலிருந்து அது கடலில் கலக்கும் ஆற்றங்கரை வரை உள்ள *209* கி.மீ. தொலைவு நீளும் பரப்பில், ஆற்றுக்கு இருபுறமும் *8* கி.மீ. தொலைவுப் பரப்பில் அமைந்துள்ள அனைத்து ஊர்களையும் ஆய்வு செய்து, கிட்டத்தட்ட *293* இடங்களில் பல்வகை ஆதாரங்களையும் கண்டுபிடித்து ஆவணப்படுத்தி இறுதியாகக் கீழடிப்பகுதி தெரிவு செய்யப்பட்ட ஒரு பெரிய திட்டப்பின்னணி கொண்டது இந்த ஆய்வு. *110* ஏக்கர் நிலப்பரப்பும், நாலரை கிலோ மீட்டர் சுற்றளவுள்ள ஊர் - மக்கள் வாழ்விடப்பகுதி - ஆய்வுக்கான இடமாகக் கிடைத்தது மிக அரிதானது. அதுவும், மதுரைக்கருகில் *15* கி.மீ.

தொலைவு என்பது கூடுதல் நிறை.

மதுரையைப் பற்றி ஆய்வு செய்ய இந்த இடம்தான் தகுதியான இடம். முதல்கட்ட ஆய்வின்போதே நிறைய ஆதாரங்கள் கிடைத்தன. ஒரு நகரம் இருந்ததற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இரண்டு முறை நடந்த ஆய்வுகளின்போதும் மொத்தம் 102 குழிகள் தோண்டப்பட்டன. தமிழ்நாட்டிலேயே முதன்முறையாகக் கட்டிடப்பகுதிகள் கிடைத்த இடம் கீழடி என்று தான் கூற வேண்டும்.

கீழடியின் முதன்மைக் கண்டுபிடிப்புக் கட்டுமானம் ஆகும். சதுரம், செவ்வகம் ஆகிய வடிவில் கட்டிடப்பகுதிகள் கிடைத்துள்ளன. இவற்றைத்தவிர வடிகால்களும், சுடுமண்ணால் செய்யப்பட்ட குழாய்களும் குறிப்பிடத் தக்க கண்டுபிடிப்பு. கட்டிடங்கள் சங்க காலத்தொடர்புடையவை.

ஹரப்பாவுக்கு நிகராகக் கருதப்படுகின்றன. சீராக அடுக்கப்பட்ட செங்கற்களால் ஆன கட்டிடப்பகுதிகள் செங்கற்களை இணைக்கக் களிமண்ணைப் பயன்படுத்தியுள்ளனர். குறிப்பிட்டுச் சொல்லும் வகையில் தொட்டிகள் கிடைத்துள்ளன. தொட்டிகளோடு சேர்ந்த அடுப்புகளும் உண்டு. தொழிற்சாலை போன்ற அமைப்பு இருந்துள்ளதை இவை சுட்டுகின்றன எனலாம்.



அகழாய்வுக் குழிகள்

நவீனக் குழாய் அமைப்புகளுக்கு சவால் விடும் சுடுமண் நீர்க் குழாய்கள்



# திருவிரிஞ்சை மதிலழகு..

## – இரா.சு.சரவணன் ராஜா

கோவில் மதில் சுவர்

தமிழ் நாட்டின் அழகிற் சிறந்த கோயில்கள் ஐந்து என்பார்,

1, திருவாரூர் தேர் அழகு,
2, திருவிடைமருதூர் வீதி அழகு,
3, வேதாரண்யம் விளக்கு அழகு,
4, சுசீந்திரம் கோபுர அழகு,
5, திருவிரிஞ்சை மதிலழகு, என்று பெயர் பெற்ற இத்தலம் வேலூர் மாவட்டத்தில் மிகவும் பழமையான ஒன்று.

அடி முடி காணும் போட்டியில் பொய் கூறிய பிரம்மாவின் தலை கொய்யப்பட்டவுடன் அவர் இறைவியை வேண்ட, இத்தலத்து இறைவனை நோக்கி தவமியற்றுமாறு கூறினார்,பிரம்மன் சாபம் போக்கப் பிரம்மனை இங்கே மானிட பிறப்பாக பிறக்க வைத்தார் ஈசன்.சிவசர்மன் என்ற பெயரில் பிறந்த பிரம்மா சிறுவனாக இருந்ததால் லிங்கத்துக்கு (லிங்கம் மிக உயரமான இருந்ததால்) நீறுற்ற முடியவில்லை, தன் ஊழ்வினை தவற்றை உணர்ந்து, பிரம்மா இறைவனை வேண்ட அவரும் தனது முடியைச் சாய்ந்து கொடுக்கிறார்.

அண்ணாமலையில் இறைவனைக் காண முடியாத பிரம்மா இத்தலத்தில் தான் இறைவனைக் கண்டு சாப விமோசனம் பெற்றார் என்பது தல வரலாறு. இங்கே மூலவராக உள்ள லிங்கம் மற்ற தலம்போல் நேராக அல்லாது சற்று முன்நோக்கி வளைந்துள்ளது. பிரம்மாவுக்குப் போதித்து வழி காட்டியதால் மார்க்கசகாயர் என்றும், இத்தலத்து வழியாகச் செல்லும் வணிகர்களுக்கு வழித்துணையாக இருந்ததாலும் மார்க்கபந்தீஸ்வரர், மற்றும் "வழித்துணை நாதர்" என்ற பெயர் ஏற்பட்டது.

1300 ஆண்டுகளுக்கு முற்பட்ட நந்தி விக்கிர பல்லவர் கல்வெட்டுகள், மேலும் பராந்தகர், இராஜாராஜர், இராஜேந்திரர், குலோத்துங்கன், சம்புவரையர்கள், விஜய நகர அரசர்கள், வேலூரை ஆண்ட அச்சுத்தேவராயர் கல்வெட்டுகள் காண கிடைக்கிறது.



அப்பர், திருமூலர், பட்டினத்தார், சம்பந்தர், அருணகிரியார், அப்பையா தீட்சிதர் ஆகியோரால் பாடல் பெற்ற தலம். இது தவிர அருணாசல புராணமும், தொண்டை மண்டல சதகமும், திருவிரிஞ்சை பிள்ளைத் தமிழும், காஞ்சிப் புராணமும், இத்தலத்தின் பெருமையைப் பேசுகின்றன.

கிழக்கு பார்த்து 110 அடி உயரத்தில், 7 நிலையுடன் கூடிய இராஜகோபுர வாயிலுடன் கூடிய அழகிய கோபுரம், ஆலயத்தைச் சுற்றி மதில் சுவர் உயரமானவை, மிகவும் அழகானவை. கருவறை வட்டவடிவில் நான்கு கவசங்களுடன் அமைந்துள்ளது, இறைவனைத் தரிசித்து விட்டு வெளியே வரும்போது கிழக்கு நோக்கி அமைந்துள்ள அன்னை மரகதாம்பிகையை தரிசிக்கலாம்.

இக்கோயில் திருமண மண்டபம், வேலூர் கோட்டை கோவிலின் திருமண மண்டபத்தின் அச்சு நிழல் பகர்ப்பு (Xerox). அழகிய சிற்ப வடிவங்கள் அலங்கரிக்கின்றன, பிராகாரத்தின் தென்மேற்கில் உள்ள கல்யாண மண்டபத்தில் சிவசர்மனின் வரலாறு சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளது, வசந்த மண்டபத்தில் பஞ்சமுக விநாயகர், தசாவதார சிற்பங்களும், ஈசனின் எண்ணற்ற கோலங்கள் சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளன, பல அழகு தூண்கள் வண்ணம் பூசி அழகு குலைக்கப்பட்டுள்ளன.

சூரிய ஒளியைக் கொண்டு காலம் காட்டும் கடிகார கல், சிம்ம குளம், நூற்றுக்கால் மண்டபம், 1008 லிங்கம் கொண்ட ஒரே லிங்கம், கங்காளர் சிற்பமும் கட்டாயம் பார்க்க வேண்டிய பகுதிகள்.

தொண்டை மண்டலத்தில் பனை மரம் தல விருட்சமாக உள்ள இரண்டு தலத்தில் இதுவும் ஒன்று.

கார்த்திகை மாதம் கடை ஞாயிறு அன்று குழந்தை பேறு வேண்டிப் பெண்கள் இந்தச் சிம்ம கிணற்றில் நீராடி ஈர உடையுடன் அங்கே உள்ள மண்டபத்தில் படுத்து உறங்குவர். இப்பெண்கள் கனவில் குழந்தையோ, பூக்களோ, வேறு மங்கல பொருட்களோ கனவில் காட்சி தந்தால், அவர்கள் விரைவில் கருத்தரிப்பர் என்பது இங்கே நம்பிக்கை. இதற்குக் கௌரி தீர்த்தம் என்ற பெயரும் உண்டு சிங்கத்தின் வாய் வழியாக நுழைந்து செல்லும் முறையில் இக்கிணறு அமைந்துள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் இந்த நாளில் இங்கே கூடும் கூட்டமே அதற்குச் சாட்சி, ஆச்சரியமான விஷயம் இங்கே வரிசையாகப் படுத்துறங்க மண்டபமும் அக்காலத்திலே அமைக்கப்பட்டுள்ளது. இன்றும் கார்த்திகை மாதம் கடை ஞாயிறன்று இந்த நிகழ்ச்சி பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

வேலூரிலிருந்து 11கி.மீ தொலைவில், ஆம்பூர் செல்லும் வழியாகப் சென்னை - பெங்களூர் தேசிய நெடுஞ்சாலையில், செதுவாலை என்ற இடத்தில் இறங்கி 1 கி.மீ வடக்காகச் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

இறை நம்பிக்கை இல்லாதவர்களும் இங்கே உள்ள சிற்ப கருவூலத்தைக் காண செல்ல வேண்டும்.






# தமிழ் சினிமாவின் நூற்றாண்டும், அதன் முதல் சூப்பர் ஸ்டாரும்

– வேல்முருகன் பெரியவன், எம்.ஜி.ஆர் அரசுத் திரைப்படக் கல்லூரி




உலக அளவில் அதிக எண்ணிக்கையில் திரைப்படங்கள் தயாரிக்கப்படும் மொழிகளில் தமிழும் ஒன்று. தமிழகத்துக்கு வெளியே இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், கனடா மற்றும் ஐரோப்பிய நாடுகளிலும் தமிழ் மொழியில் திரைப்படங்கள் தயாரிக்கப்பட்டு வருகின்றன. தமிழ் சினிமாவானது தமிழல்லாத பிறமொழி பேசுபவர்களிடத்திலும் கணிசமான ரசிகர்களைக் கொண்டுள்ளது. தமிழகத் திரைத்துறையானது லட்சக்கணக்கானோருக்கு நேரடி மற்றும் மறைமுக வேலைவாய்ப்புக்களை வழங்கி வருவதுடன், பல திறமையான தொழில் நுட்பக்கலைஞர்களைப் பிறமொழி சினிமாவுக்குக் கொடுத்தும் வருகிறது. இத்தகைய சிறப்புவாய்ந்த தமிழ் திரைப்படத்துறை இவ்வாண்டு தனது நூற்றாண்டினை நிறைவு செய்கிறது. ஆனால், அது தனது வரலாற்றைப் பதியவைப்பதில் சுணக்கம் கொண்டுள்ளது.

தமிழ் சினிமாவின் துவக்கத்தைத் தீர்மானிப்பதில் ஏற்பட்ட சில குழப்பங்கள் காரணமாக நூற்றாண்டைக் கொண்டாடுவதில் திரைப்படத் துறையினரிடையே சிறு தயக்கம் நிலவி வந்தது. இந்தக் குழப்பத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும் விதமாகத் தற்போது சில ஆதாரங்கள் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. தமிழகத்தில் முதன்முதலில் திரைப்படத் தயாரிப்பைத்

துவங்கியவரான ஆர். நடராஜ முதலியார் தயாரித்து இயக்கிய கீசகவதம் என்ற மௌன திரைப்படம் வெளியான துல்லியமான தேதி இதுவரையிலும் கண்டறியப்படவில்லை. அந்தத் திரைப்படத்தின் விளம்பரங்களோ, பத்திரிகை விமர்சனங்களோ இன்றுவரையில் கிடைக்கப் பெறவில்லை. நடராஜ முதலியார் தனது இறுதிக் காலத்தில் பத்திரிகைகளுக்கு அளித்த பேட்டிகளை ஆதாரமாகக்கொண்டே கீசகவதம் திரைப்படத்தின் வரலாற்றை இன்றைக்கு அறியமுடிகிறது.

இந்திய சினிமாவின் தந்தையாக அறியப்படும் தாதா சாகே பால்கே 1912 ஆம் ஆண்டுத் தயாரித்து இயக்கிய ராஜா ஹரிச்சந்திரா எனும் மௌனத் திரைப்படமானது 1913 ஆம் வருடம் மே மாதம் 3 ஆம் நாள் திரைக்கு வந்தது. அந்தத் திரைப்படம் வெளியான நாளை கணக்கில் கொண்டு 2013 ஆம் ஆண்டு இந்தியத் திரைப்படத்தின் நூற்றாண்டு விழா வெகுவிமரிசையாக நாடு முழுவதும் கொண்டாடப்பட்டது. அதே போன்று கீசகவதம் திரைப்படம் வெளியான 1918 ஆம் ஆண்டினை கணக்கில் கொண்டால் தமிழ் சினிமாவின் நூற்றாண்டு 2018 ஆம் ஆண்டில் கொண்டாடப்பட வேண்டும்.

நடராஜ முதலியார் அளித்துள்ள பத்திரிகை பேட்டிகளில் காணப்படும் சில முரண்பட்ட தகவல்கள் காரணமாகவே தமிழ் சினிமாவின் நூற்றாண்டைக் கணக்கிடுவதில் குழப்பம் ஏற்பட்டது. அவர் அளித்துள்ள இரண்டு பேட்டிகளில் கீசகவதம் திரைப்படத்தை 1916 ஆம் ஆண்டுத் தயாரித்ததாகக் கூறியிருக்கிறார். ஆனால், அந்தத் திரைப்படம் எப்போது வெளியானது என்கிற விபரம் அந்தப் பேட்டிகளில் இடம்பெறவில்லை. வேறுசில பத்திரிகைகளுக்கு அவர் அளித்துள்ள பேட்டிகளில், 1917 ஆம் ஆண்டு இந்தியன் பிலிம் நிறுவன எனும் திரைப்படத் தயாரிப்பு நிறுவனத்தைத் துவங்கி கீசகவதம் திரைப்படத்தைத் தயாரித்ததாகக் கூறியிருக்கிறார்.

இந்திய சினிமாவின் வரலாற்றைக் குறித்து ஆங்கிலத்தில் புத்தகங்கள் எழுதியிருக்கும் டி.எம். ராமச்சந்திரன் என்கிற பிரபல சினிமா வரலாற்றாளருக்கு நடராஜ முதலியார் அளித்துள்ள விரிவான பேட்டியில், 1917 ஆம் ஆண்டுப் படத்தயாரிப்பை துவங்கியதாகவும், 1918 ஆம் ஆண்டுச் சென்னையில் உள்ள எல்பின்ஸ்டன் திரையரங்கில் இரண்டு வாரகாலத்திற்குக் கீசகவதம் திரையிடப்பட்டதாகவும் தெளிவாகக் கூறியிருக்கிறார். பூனாவில் இயங்கிவரும் தேசிய திரைப்பட ஆவணக்காப்பகம், கீசகவதம் திரைப்படம்குறித்த விபரங்களுக்கு டி.எம். ராமச்சந்திரன் எழுதிய கட்டுரைகளையே முதன்மை ஆதாரமாக அங்கீகரித்துள்ளது.

தமிழ் சினிமாவின் நூற்றாண்டைக் குறித்து ஆவணப்படம் தயாரித்துள்ள ஊடகவியலாளர் என். முருகராஜன், நடராஜ முதலியாரின் உறவினர்களைத் தேடிக்கண்டுபிடித்துச் சேகரித்த தரவுகளில் இரண்டு முக்கியமான ஆதாரங்கள் தற்போது கிடைக்கப்பெற்றிருக்கின்றன. நடராஜமுதலியாரின் திரைப்பட நிறுவனமான இந்தியன் பிலிம் நிறுவன யின் அலுவலக வர்த்தகக் கடிதஅட்டை (letter pad) கிடைத்திருக்கிறது. அந்தக் கடித அட்டையில், இந்தியன் பிலிம் நிறுவன 1917 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது என்று ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

தென்னிந்திய பிலிம் டெக்னீசியன் சங்கத்தின் சார்பில் 1970 ஆம் ஆண்டு நடத்தப்பட்ட வெள்ளி விழா நிகழ்ச்சியில் நடராஜ முதலியார் கௌரவப்படுத்தப்பட்டிருக்கிறார். வெள்ளி விழா நடைபெறுவதற்கு முன்னதாக நடராஜமுதலியார் தனது சினிமா அனுபவங்களை ஒரு கட்டுரையாக எழுதிக் கையெழுத்திட்டு அந்தச் சங்கத்திற்குச் சமர்ப்பித்திருக்கிறார். அந்தக் கட்டுரையின் நகல் ஒன்றும் தற்போது கண்டறியப்பட்டிருக்கிறது. கீசகவதம் திரைப்படம் 1917 ஆம் ஆண்டுத் தயாரிக்கப்பட்டதாக அவர் அந்தக் கட்டுரையில் தெரிவித்திருக்கிறார்.

இதுவரைக்கும் கிடைத்துள்ள ஆதாரங்களின்படி, கீசகவதம் திரைப்படமானது 1916 ஆம் ஆண்டில் தயாரிக்கப்பட்டிருக்கவோ அல்லது வெளியாகியிருக்கவோ வாய்ப்பு இல்லை என்பது தெள்ளத்தெளிவாகத் தெரிகிறது. நடராஜ முதலியாரின் கூற்றுப்படி, 1917 ஆம் ஆண்டில் தயாரிக்கப்பட்ட கீசகவதம் 1918 ஆம் ஆண்டில் வெளியான திரைப்படம் என்பதினை உறுதியாக ஏற்கலாம். எனவே இந்த 2018 ஆண்டைத் தமிழ் சினிமாவின் நூற்றாண்டாக அங்கீகரிப்பதில் எந்தவித தயக்கமும் தேவையில்லை.

ஒரு மௌனத் திரைப்படத்தை மொழியோடு அடையாளப்படுத்த முடியுமா? என்கிற ரீதியிலும் கேள்விகள் எழுப்பப்படுகின்றன. ஒரு மௌன சினிமா எந்த மொழி பேசப்படும் வட்டாரத்தில் தயாரிக்கப்படுகிறதோ, அது அந்த மொழி சார்ந்த மௌன திரைப்படமாகவே உலகச் சினிமா வரலாற்றில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. நமது அண்டை மாநிலமான கேரளாவில் முதல் சினிமா அங்கீகரிக்கப்பட்ட சினிமா வரலாற்றையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த தமிழரான ஜே.சி.டேனியல் 1930 ஆம் ஆண்டு விகதகுமாரன் என்ற மௌன திரைப்படத்தைத் திருவனந்தபுரத்தில்

தயாரித்து வெளியிட்டார். அந்தத் திரைப்படம் மலையாளத்தின் முதல் திரைப்படமாக அங்கீகரிக்கப்பட்டதுடன், ஜே.சி. டேனியல் மலையாள சினிமாவின் தந்தையாகவும் போற்றப்படுகிறார். கேரள அரசால் ஆண்டுதோறும் வழங்கப்பட்டுவரும் மலையாள சினிமாவின் வாழ்நாள் சாதனையாளர் விருதானது ஜே.சி. டேனியல் பெயரிலேயே வழங்கப்பட்டு வருகிறது என்பதும் நாம் கணக்கில் கொள்ளவேண்டிய பெருமைக்குரிய விசயமாகும்.

ஒரு மொழியின் பெருங்கலை வடிவம் தனது நூற்றாண்டைக் கொண்டாடுவது என்பது, அந்த மொழி தனது பாரம்பரியத்தைத் திரும்பிப் பார்ப்பது போன்றதாகும். நூற்றாண்டு காணும் தமிழ் சினிமா துறையினர் தங்களது பெருமைமிகு வரலாற்றினைப் பறைசாற்றும் வகையில் தமிழ் சினிமா நூற்றாண்டை மிகச்சிறப்பாகக் கொண்டாடுவதே இப்பெருங்கலைக்கு அளித்திடும் மரியாதையாகும். கொண்டாட்டங்களின் மூலம்தான் நாம் மறந்துபோன சினிமா முதாதையர்களை நினைவுபடுத்தவும், இழந்துபோன நம் சினிமாக்களையும் மீட்டெடுக்க இயலும் என்பது திண்ணம். இந்திய சினிமாவின் நூற்றாண்டை விமரிசையாகக் கொண்டாடிய தமிழக அரசும் தமிழ் சினிமாவின் நூற்றாண்டினை சிறப்பிக்க நம் கோரிக்கைகளை முன்வைக்க வேண்டும்.

தமிழ் சினிமா - சூப்பர் ஸ்டாரின் நினைவுகள்:

ஆதிசமூகம் உயிர்வழி தவிர்த்து, தன்னைக் கடத்திட ஆவணப்படுத்தியதையே கலை வடிவங்களாய் ஏற்று வரலாறாக இன்று கொண்டாடி வருகின்றோம். குகைக்குள் வரையப்பட்ட பாறை ஓவியங்களும், படவுருக்களும், மொழி பரவலான பின்பான கல்வெட்டுக்களும், மண்பாண்ட எழுத்துருக்களும், இலக்கியங்களும், கதை சொல்லல்களும், சமகால நிகழ்வுகளை ஆவணப்படுத்தும் ஓலைச்சுவடிகளும், செப்பேடுகளும் காலக்கண்ணாடியாய் நம்முள் பெரும் நூலிழையாய் பரந்து விரிந்து கிடக்கின்றது. அவையே நமது வரலாற்று அடையாளங்கள். நமது தொல்லியல் தரவுகளுக்குப் பின்பான நம் வரலாறென்பது பதிப்பிக்கப்பட்ட புத்தகங்களும், நாளிதழ்களும், சினிமாவுமே.

பாவைக்கூத்தும் தோல்பாவைக்கூத்தும் உயிரற்ற உருவத்தோடு கதை பேச, தெருக்கூத்து எனும் உயிர் உருவத்தோடு கதை சொல்லும் கலைவடிவங்கள் சினிமாவிற்கும் முந்தைய வாய்வழி நிகழ்த்துக்கலைகள். சமகால ஊடகமான நாடகக்கலை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இம்மண்ணின் இதிகாசங்களையும், புராணங்களையும் நிகழ்ச்சிகளாக நடத்தினாலும், சமூக வாழ்வியலையும், வாழ்வியல் அவலங்களையும் நையாண்டி செய்த "மத்த விலாச பிரகசனம்" என்கிற நாடகத்தினைப் பற்றிய குறிப்புகள் மாமாண்டூர் குடைவரை கல்வெட்டில் காணக்கிடைக்கிறது. செய்யார் - காஞ்சிபுரம் சாலையில் "மாமண்டூர்" என்கிற ஊரிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் மலையடிவாரத்தில் ... ஒரு ஏரிக்கு அருகில் உள்ளது இந்தக் குடைவரைக் கோவில் கல்வெட்டு. இந்தக் குடைவரையில், முற்றுப்பெறாத இரண்டு குடைவரைகளும், முற்றாக்கப்பட்ட இரண்டு குடைவரைக் கோயில்களும் உள்ளன.

1400 வருடங்களுக்கு முந்தய முடிவுற்ற குடைவரை கல்வெட்டில் ... நாடகம் குறித்த பதிவு உள்ளதாக அறிய முடிகிறது. முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் காலத்தைய கல்வெட்டான அக்கல்வெட்டில், "மத்த விலாச பிரகசனம்" என்கிற நாடகத்தினை முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் எழுதி நடத்தியதான தகவல் பதிவாகியுள்ளது. தமிழ்நாட்டில் நாடகம் இயற்றப்பட்ட வரலாற்றுக்கு இக்கல்வெட்டை ஆதாரமாக ஏற்கலாம். இந்த மத்தவிலாச பிரகசனம் நாடகம் தமிழில் எழுதப்படவில்லை. சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட மத்தவிலாசம் மற்றும் பகவதஜுக்கா என்கிற இரு நாடகங்களும் சென்னை கிறித்தவக் கல்லூரி பேராசிரியர்கள் மைக்கேல் லாக்வுட், விஷ்ணு பட் இவர்களால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு இன்றளவும் காணக்கிடைக்கிறது.

நிகழ்த்துக்கலையான நாடகத்தினை எழுத்து வடிவிலோ அல்லது ஞாபக வழியிலோ மட்டுமே ஆவணப்படுத்த முடியும். ஒரு காலத்தின் வாழ்வியலைச் சமகால மாந்தர்களின் அசையும் அசைவுகளுடனும், ஒலியுடனும் பதிப்பிக்கும் பெருங்கொடை கொண்டது சினிமா எனும் காட்சி ஊடகமே. இந்த ஊடகம் தன்னைக் கலையின் சார்புடன் நிலைப்படுத்திக்கொண்டது என்பது ஆவணப்படுத்திடப்பட வேண்டியது.





கதாநாயக பிம்பங்களும் அதனைப் பின்தொடரும் ரசிகக்கூட்டமும் தான் ஒரு கலையை உயிர்ப்புடன் வைத்திருக்குமா என்றால் பாக்ஸ்ஆபீஸ் கணக்கில் இன்றுவரையில் அத்தகைய செயல்முறை மெய்யுற்றே இருந்து வருகிறது. இதற்கு ஆங்கிலேயர் காலத்தில் பாலாம்பாள் என்கிற நாடக அரசியின் பெயரால் ஓடிய பாலாமணி எக்ஸ்பிரஸ் என்கிற ரயிலே பதிலளிக்கும்.

கலையை வர்த்தகப்படுத்தலாமா என்கிற கேள்வியும் இன்றுவரையில் நூலிழையறுந்த வெற்றுப்பேசுபொருளாகவே கடந்து கொண்டிருக்கின்றது. கனவுகளையும் கற்பனைகளையும் கண்முன்னே திரையில் காணுபொருளாகக் காணும் ரசிகன் தன்னிலை மறந்து லயித்து அத்திரைப்பொருளுக்கு அடிமையாகின்றான். தான் ரசித்தபிம்பத்தைத் கடவுளுக்கொப்ப பாவித்துப் பாலாபிஷேகம் செய்கின்றான். இந்த ரசிகத்தன்மையின் உறுதிப்பாட்டிலிருந்து தான் சூப்பர் ஸ்டார் என்கிற பிம்பம் கட்டமைக்கப்படுகிறது.

1918 ஆம் ஆண்டு வெளியான கீசகவதம் எனும் மௌனத் திரைப்படத்திலிருந்துதான் தமிழ் சினிமாவின் வரலாறு துவங்குகிறது. தமிழில் சப்தங்களற்ற திரைப்படங்கள் வெளியாகிப் பதிமூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தான் சினிமா தமிழ் பேசத்துவங்குகிறது. தமிழ் மொழியில் திரைப்படங்கள் பேச ஆரம்பித்தபோது அதனை டாக்கி என்றே ஆங்கிலத்தில் அழைத்தனர்.

முதல் தென்னிந்திய பேசும்படமான காளிதாஸ் 31.10.1931 அன்று வெளியாகிறது. 1931 ம் ஆண்டில் வேறு எந்தத் தமிழ் திரைப்படமும் திரைக்கு வரவில்லை. 1932 ஆம் ஆண்டில் காலவா, பாரிஜாத புஷ்பஹாரணம், இராமாயணம், சம்பூர்ண ஹரிஸ்சந்ரா என்கிற நான்கு தமிழ் திரைப்படங்கள் மட்டுமே வெளியானது. 1933 ஆம் ஆண்டில் கோவலன், சத்யவான் சாவித்திரி, நந்தனார், பிரஹலாதா (நியூ தியேட்டர்ஸ்), பிரஹலாதா (ஈஸ்ட் இந்தியா ஃபிலிம் கம்பெனி), வள்ளி (நேசனல் மூவி டோன்), வள்ளி திருமணம் (பயோனீர் ஃபிலிம் கம்பெனி) என்கிற ஏழு தமிழ் திரைப்படங்கள் வெளியாயின.

இந்தப் படங்களில் பயோனீர் ஃபிலிம் கம்பெனி தயாரித்த வள்ளித் திருமணம் திரைப்படத்தைத் தவிர மற்ற எந்தப் படங்களும் வெற்றி பெறவில்லை.

27.12.1933 அன்று சென்னை கெயிட்டி திரையரங்கில் வெளியான வள்ளி திருமணம் திரைப்படத்தின் மூலம் தமிழ்த்திரையின் முதல் பாக்ஸ் ஆபீஸ் கணக்கை துவங்கிவைத்து முதல் பெருவெற்றிக்கதாநாயகனாக (ஸூப்பர் ஸ்டாராக) தன்னை அடையாளப்படுத்திக் கொண்டவர் சி.எம். துரைசாமி. இத்திரைப்படம் ஓராண்டுக்கும் மேலாகத் தமிழ்த்திரையை அலங்கரித்துள்ளது. இப்படத்தின் வெற்றியினால் அடுத்த ஆண்டில் 16 தமிழ் திரைப்படங்களும், அடுத்த ஆண்டில் 36 தமிழ் திரைப்படங்களும் எனத் தமிழ் சினிமா வேகப்பாய்ச்சல் எடுத்தது.

இந்தப் பரவலாக்கத்துக்குக் துணையாக இருந்தவர் எம். கே. தியாகராஜ பாகவதர் எனும் நாடகக் கலைஞர். அவர் நடித்த பவளக்கொடி எனும் நாடகம் 1934 ஆம் ஆண்டுத் திரைப்படமாகத் தயாரிக்கப்பட்டுப் பெருவெற்றிபெற்றது. அடுத்ததாக அவரது நடிப்பில் நவீன சாரங்கதாரா சத்தியசீலன் போன்றபடங்கள் 1936 ஆண்டில் வெளியாகிப் பெரும் வரவேற்பை பெற்றன. 1937 ஆம் ஆண்டில் சிந்தாமணி என்கிற திரைப்படம் வெளியாகி ஓராண்டு திரையைவிட்டு அகலாமல் மாபெரும் வெற்றிப் பெற்றது. தொடர்ந்து, அம்பிகாபதி - (1937), திருநீலகண்டர் - (1939), அசோக்குமார் - (1941), சிவகவி - (1943), ஹரிதாஸ் - (1944), ராஜமுக்தி - (1948), அமரகவி - (1952), சியாமளா - (1952), புதுவாழ்வு - (1957) மற்றும் அவரது மரணத்திற்குப் பின்பாக வெளியான சிவகாமி - (1960) என மொத்தம் 14 தமிழ் திரைப்படங்கள் தியாகராஜ பாகவதர் நடித்துத் தமிழ் சினிமாவின் துவக்ககால அஸ்திவாரத்தைப் பலப்படுத்திக் கட்டுமானம் செய்தன.

16.10.1944 - ல் சென்னை பிராட்வே திரையரங்கில் வெளியான ஹரிதாஸ் திரைப்படம் தொடர்ச்சியாக மூன்று ஆண்டுகள் (16.10.1944 முதல் 22.11.1946 வரை) திரையில் தங்கி, மூன்று தீபாவளிகளைக் கொண்டாடி தமிழ் திரைப்பட வரலாற்றில் தன்னை விஞ்சிட எவரும்

இல்லை என்பதை நிறுவி வரலாறு படைத்துள்ளது. அடுத்ததாக அதனை மிஞ்சும் விதத்தில், 1943 ஆம் ஆண்டு வெளியான சிவகவி படத்தில், பாபநாசம் சிவன் எழுதி, பாகவதர் பாடிய அம்பா மனங்கனிந்து என்கிற பாடல் சென்னை புரசைவாக்கத்தில் உள்ள பாதாள பொன்னியம்மன் ஆலயத்தில் 1940 களில் கல்வெட்டாக நிறுவப்பட்டது.

அத்தகைய வரலாற்றுக் கல்வெட்டின் மகிமை அறியாதவர்களால் அந்தக் கல்வெட்டு பெயர்த்து உடைத்து அகற்றப்பட்டு ஒரு மூலையில் கேட்பாரற்று அனாதையாய்க் கிடக்கிறது (புகைப்படம் காண்க). இவ்வாறாகத் தமிழ் திரையின் சூப்பர் ஸ்டாராக வலம் வந்த எம்.கே.டி அவர்கள் லட்சுமிகாந்தன் கொலைவழக்கில் சிக்குண்டு 27.12.1944 அன்று கைது செய்யப்பட்டார்.

இரண்டு ஆண்டுகள் இரண்டு மாதங்கள் பதிமூன்று நாட்கள் சிறை தண்டனையால் துன்புற்று, பெரும் சிரமமடைந்து வருந்தி, 25.04.1947 அன்று மேல்முறையீட்டு தீர்ப்பால் விடுதலை பெற்றார்.



சிறைமீண்ட பின்னர், எம்.கே.டி நடித்த திரைப்படங்கள் வெற்றிபெறாமல் போக ... தமிழ் திரையின் சூப்பர் ஸ்டார், ஏழிசை மன்னன், காதலன், தனது கடைசிகாலத்தில் வறுமையில் உழன்று, பெருநோய்வாய்ப்பட்டு, 22.10.1959 அன்று சென்னை அரசு பொதுமருத்துவமனையில் அனுமதிக்கப்படுகின்றார். மருத்துவச் சிகிச்சை பலனற்று போக, 01.11.1959 அன்று மாலை 06:20 மணிக்கு உதவிக்கு ஆளின்றி, கேட்பாரற்று,. அனாதையாய் மரணித்துப்போனார்.

அவரது கல்லறை சினிமாக்காரர்களின் கண்ணுக்குப்புகப்படாமல் திருச்சியை அடுத்தச் சங்கிலியாபுரத்தில் மறைபொருளாய் அவதானிக்கிறது.

அவர் மறைந்தாலும், மன்மத லீலையை வென்றாருண்டோ... பாடல் நம் மூச்சுக்காற்றுக்குள் ஏழிசை கீதமாய்க் காற்றினிலே கலந்து நம் சுவாசப்பையை நிரப்பிச்செல்கிறது ! அவரது நினைவு தினம் கடந்ததை (01.11.2018) கூட நினைவு வைக்காது தமிழ் சினிமா வர்த்தகச் சர்க்கார் செய்வது அறமற்றதே.

கட்டுரையாளர்: "தமிழ் திரைப்பட நூற்றாண்டு - 2018" புத்தகத்தின் ஆசிரியர். வேல்முருகன் பெரியவன், ஆசிரியர், எம்ஜிஆர் அரசுத் திரைப்படம் பயிற்சி நிறுவனம், தரமணி.

தமிழ் திரைப்பட
நூற்றாண்டு – 2018

பெ. வேல்முருகன்



# தாய்நதியை பழிக்கலாமா ?

– ச.சு.நாகராஜன், சித்த மருத்துவ மாணவர்



தாமிரபரணி தமிழகத்திலேயே பிறந்து தமிழகத்திலேயே ஓடி தமிழகத்திலேயே கடல்சேரும் ஒரே ஜீவநதி "தாமிரபரணி "தான். 2525 கிலோமீட்டர்கள் பயணிக்கும் கங்கையுடனும், 925 கிலோமீட்டர்கள் பயணிக்கும் பிரம்மபுத்திரா நதியுடனும் ஒப்பிட்டால் தாமிரபரணி சிற்றோடை போலத்தான் தோன்றும் .வைகை, பவானி போன்ற மற்றைய தமிழக ஆறுகளுடன் ஒப்பிடும்போது தாமிரபரணி பெருநதி தான். பொதிகைமலையில் பூங்குளத்தில் தொடங்கிப் புன்னைகாயலில் கடல்சேரும்வரையில் அதன் மொத்த நீளமே 128கிலோமீட்டர்தான். இந்தத் தொலைவிலும் வழிநெடுகிலும் ஆன்மிக ஸ்தலங்களால் நிரம்பி வழிகிறது தாமிரபரணி.

பண்டைய தமிழ்நூல்களால் தண்பொருநை, தாமிரவருணி, எனப் பலவாறு குறிப்பிடப்பட்ட தாமிரபரணி சிறிது சிறிதாக அதன் பெருமைகளை இழந்து வருவது ஏற்கமுடியாத உண்மையே.

"தாய்வழி சமூகமும், நதிவழி நாகரீகமுமாய் இருந்த நாம் அவற்றை மறந்ததால் நேரிட்ட விளைவுகளை எதிர்கொள்கிறோம்.

கடந்த அக்டோபர் 11 முதலாய் 23 வரை நடந்து முடிந்த மகாபுஷ்கரணி விழாவில் லட்சக்கணக்கான பக்தர்கள் வந்து குவிந்து தாமிரபரணி நதியில் நீராடி அகம் மகிழ்ந்தனர். 144 வருடத்திற்கு ஒருமுறை என்பதால் இதனைப் பெருமை. ஆனால் 144 வருடத்திற்கு முந்திய தாமிரபரணியின் நிலை வேறு இப்போது அதன் நிலை வேறு..

புஷ்கர விழாவில் குவிந்தது மக்கள் மட்டுமல்ல கூடை கூடையாய் பூக்களும்தான் ஆத்தனையும் நதியில் கொட்டப்பட்டது. தங்களின் பாவத்தைக் களைய நதியில் நீராடும் மக்கள் நதிகளைப் பரிதாப நிலைக்குத் தள்ளுவதை எப்படி ஏற்க முடியும்?

வருடம் தோறும் பாபநாசத்தில் கொண்டாடப்படும் சொரிமுத்து அய்யனார் கோவில் திருவிழா நடைபெறுகின்றது. அப்போது தாமிரபரணி ஆற்றில் விடப்படும் டன்கணக்கான துணிகள், போக்கிடம் தெரியாமல் ஆற்றின் குரல்வளையை நெரிக்கிறது.

ஆற்றில் நீரெடுக்கும் பெருநிறுவனங்களுக்குத் தடை விதித்த போதிலும், புதிதாகப் புற்றீசல்களாக உருவான பல சிறுநிறுவனகளால் தாமிரபரணி நதியின் நீர் வரைமுறையின்றி உறிஞ்சப்படுகிறது. முறையான சுத்திகரிப்பு ஏதுவுமின்றி ஆற்றில் கலக்கப்படும் நெல்லை மற்றும் தூத்துக்குடி நகரக் கழிவுகளும் நதியை மேலும் மூடமாக்குகிறது. 2010 ஆண்டிலேயே தாமிரபரணியில் தடைவிதிக்கப்பட்ட மணல் கடத்தல் இன்றும் நதியின் நெஞ்சுக்கூட்டைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கிழித்துக் கொண்டுதான் இருக்கிறது.

ஆற்றின் ஒரங்களில் இன்னும் திறந்தவெளி கழிப்பிடமாக உள்ள அவல நிலையும் நீடிக்கிறது.

"தாமிரவாற் றுப்புனலால்
கரமும் பித்துவிழித்
தூம்பரமுட் காய்ச்சல்
சுவாசநோய் சோம்பிமிகக்
கக்குகய மென்புருக்கி கைகா
லெரிவுடனே
மிக்குறதா கங்களும்
போம்வீள் ",

எனப் பதார்த்தகுணசிந்தாமணி, கூறும் வரிகள் தாமிரபரணி நீரின் பெருமையைப் பறைசாற்றும்.

இந்தக் குணங்கள் காக்கப்பட்டு, தூய்மையான நதியை நம் அடுத்தத் தலைமுறைக்குப் பரிசாகக் கொடுக்க வேண்டும். நமக்குத் தற்போது வேண்டியது சூழல் சார்ந்த பற்றும், நதிகள் குறித்த புரிதலும் தான்.

தாமிரபரணியை நாம் ஒவ்வொருவரும் நமது தாயாகக் கருதி அவளைக் காக்க உறுதிகொள்வோம்.



# திருவண்ணாமலை மரபுப்பயணம்

## – A.T மோகன்





திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவத்தின் நான்காவது மரபுநடை ஐம்பை-திருவரங்கம்-பெருமணம் ஆகிய வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர்களில் நடக்க இருக்கும் பயணத்தில் கலந்துகொள்ள நானும் நண்பர்கள் பூங்குன்றன், முருகன், மகாலிங்கம் என நால்வரும் அதிகாலையில் சேலத்திலிருந்து திருவண்ணாமலை நோக்கிக் காரில் கள்ளக்குறிச்சி வழியாகச் சென்றோம், குறிப்பிட்ட நேரத்திற்கு முன்பே திருவண்ணாமலை அடைந்ததால் நேராக அண்ணாமலையார் கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து விட்டு நிகழ்ச்சி ஏற்பாட்டாளர்கள் வரச் சொல்லி இருந்த தமிழ்நாடு ஹோட்டலைப் போய்ச் சேர்ந்தோம். எப்போதும் குறிப்பிட்ட நேரத்தில் சொல்லியபடி துவங்கும் திருவண்ணாமலை மரபு நடை நண்பர்கள் சிலரின் தாமதத்தால் நிகழ்ச்சியும் தாமதமாகவே துவங்கியது.

காலையில் தொடங்கிய மரபுநடை, திருவண்ணாமலை வட்டம் பெருமணம் கிராமத்தில் பள்ளிமாணவர்கள், ஊர் முக்கியப் பிரமுகர்களின் உற்சாக வரவேற்புடன் தொடங்கி ஊர் பற்றிய பூங்குன்றன் அய்யாவின் சிறப்புரையைக் கேட்டு விட்டு விழா ஏற்பாட்டாளர்கள் சார்பில் அருகில் உள்ள தேவாலயத்தில் பொங்கல், இட்லி, வடை,தேநீர் எனச் சிறப்பான காலைச் சிற்றுண்டி முடித்து (அகோர பசி) சிவன் கோயில், சமணர் சிற்பங்களைப் பார்வையிட்டு முடித்துத் திருவரங்கம் கோயில் சென்றோம்.

அங்குத் தானியக்களஞ்சியம், இசைச்சிற்பம், அரங்கநாதரைப் பார்த்து அடுத்ததாகத் தமிழ்நாட்டு வரலாற்றுச் சிறப்பு மிக்க ஐம்பையை நோக்கிய பயணம் தொடர்ந்தது.

ஐம்பை வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே சிறப்படைந்த ஊர் என்றும் இடைக்காலத்தில் ஒரு வணிகத்தலமாகவும் இருந்துள்ளது. அங்கு முதலில் சிவாலயம் சென்று பார்த்துவிட்டுக் கல்வெட்டுகள், கோயில் சிறப்புகள்பற்றி ஐயா பூங்குன்றன் உரை கேட்டு ஏரிக்கரையை நோக்கிப் பயணமானோம். அங்கே மிக அருமையான மதியம் வடை, அப்பளம், பப்படம் பொரியல் ஆகியவற்றுடன் சிறப்பான மதிய உணவு உண்டபின் நண்பர் விழுப்புரம் வீரராகவன் அவர்களுடன் சிறிது உரையாடினேன். பின்பு பாறை ஓவியங்கள், கல்வெட்டுகளை நோக்கிக் குன்றின் மீது நடக்கத் துவங்கினோம்

பாறைக் கல்வெட்டுகள், செக்குக்கல்வெட்டு எனப் பல்வேறு வரலாற்று ஆதாரங்கள் இவ்விடத்தில் கொட்டிக்கிடக்கின்றன. வரலாற்று ஆய்வாளர்கள் ஐம்பைக் குன்றின் மீது பழங்கால ஓவியங்களையும், கல்வெட்டு, சமணர் படுக்கைகள், ஆதி மனிதர்கள் வாழ்ந்த குகைகளை ஆர்வமுடன் பார்த்தனர். இத்தமிழிக் கல்வெட்டு "சதியபுதோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாழி" என்று வெட்டப்பட்டுள்ளது. இது அதியமான் என்ற சங்ககாலத் தமிழ் மன்னன் மரபு பற்றித் தெரிந்துகொள்ள உதவும் அரிய சான்றாகும்.

இவ்வரிய மரபுநடையை ஏற்பாடு செய்த வரலாற்று ஆய்வுநடுவத்தின் நண்பர் பால முருகன் அவர்களின் குழுவிற்கும் நன்றி கூறி விடைபெற்றோம்.

வரும் வழியில் அங்கு ஒரு புதிய செக்கு கல்வெட்டு கண்டோம், உடனே அதைப் பற்றிப் பால முருகன் அவர்களுக்குப் போன் செய்து சொல்லிவிட்டு புறப்பட்டோம்,

# சித்திரங்கள் மயக்கும் சித்தன்னவாசல்

## – கௌதம் பாலசுப்ரமணியம்

தென்தமிழகத்தில் சமண சமயம் பரவியிருந்த காலகட்டங்களில் பல இடங்களில் சமணர்கள் படுகைகள், குடவரை அமைத்து வாழ்ந்து வந்தனர். அத்தகைய சமண சின்னங்கள் இன்று தமிழகத்தில் அதிகளவில் காணப்படும் ஊர்கள் மதுரை மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்களாகும். அதில் சமணர்களால் வரையப்பட்ட உலகப் பிரசித்தி பெற்ற சித்தன்னவாசல் சித்திரத்தைப் பற்றியே இந்தத் தொகுப்பு. புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டத்தில் அமைந்துள்ள ஊர் சித்தன்னவாசல் இயற்கையாகவே பாறை குன்றுகள் அதிகமாக இருக்கும் ஊர் ஆதலால் சமணர்கள் இங்கே அதிகளவில் வாழ்ந்திருக்கிறார்கள், இதில் கி.பி 7ம் நூற்றாண்டில் சமணர்களால் குடையப்பட்ட குடைவரையில் வரைந்துள்ள ஓவியம் தான் நம்மைச் சித்தன்னவாசலை நோக்கி அழைக்கிறது.

கி.பி 7 மற்றும் 8ஆம் நூற்றாண்டில் குடையப்பட்ட இக்குகை கோயில் முகப்பு மண்டபம் உள் மண்டபம் என அமைக்கப்பெற்றுள்ளது. முகப்பு மண்டபத்தின் வெளிபகுதியில் உள்ள இரண்டு தூண்களில் சற்றே சிதைந்த நிலையில் உள்ள அழகிய நடனமங்கையின் ஓவியங்கள் நம்மைப் புன்னகையுடன் வரவேற்கின்றன, அதன் மேல் விதானத்தின்(விட்டம்) முன்பகுதியில் இரு அன்னப்பறவைகள் தாமரை தண்டிலிருந்து பிரியும் பால் போன்ற திரவத்தைப் பிரித்து நீரை மட்டும் பருகித் தடாகத்தில் உலவுகின்றன, தாமரை தடாகத்தின் ஓவியம் பாதி சிதைந்து காணப்படுகிறது, வலது தூணின் பக்கவாட்டு பகுதியில் 8ஆம் நூற்றாண்டில் பாண்டியநாட்டை ஆண்ட பாண்டிய மன்னன் அவனிபாகசேகர ஸ்ரீவல்லபன் தன் மனைவியுடன் உள்ள சித்திரம் அழகும் கம்பீரமும் ஒருங்கே தீட்டப்பட்டுள்ளது. முகப்பு மண்டபத்தின் உட்புறம் மேல்விதானத்தில் (விட்டம்) இரு சமண முனிவர்கள் அல்லி மலர்களைச் சேகரித்து செல்வதும், மான் துள்ளி விளையாடுவதும், குளத்தில் பச்சை நிற மகரமீன் தன் தலையை தூக்கிப் பார்ப்பது போன்ற உருவங்களும் தீட்டப்பெற்றுள்ளன.

மேலும் முகப்பு மண்டபத்தின் இடது புறத்தில் சமண சமயத்தின் 24வது தீர்த்தங்கரான வர்த்தமான மகாவீரரின் புடைப்பு சிற்பமும் வலது புறத்தில் ஐந்து தலை சர்ப்பம் குடைபிடிக்கும் பார்சுவநாதர் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளது. முகப்பு மண்டபத்தைக் கடந்து சென்று உள் மண்டபத்தை அடைந்தால் அங்கே மூன்று சமண தீர்த்தங்கரின்








சிற்பங்கள் காணப்படுகின்றன. உள் மண்டபம் கர்ப்ப கிரக ஸ்தானத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

கிட்டதட்ட 1300 ஆண்டுகளுக்கு முன்னால் எவ்வித ரசாயன கலவையும் இல்லாமல் தாவர இலைகள் மற்றும் பூக்களின் சாற்றையும் பொடித்த பாறை துகள்களால் ஆன கலவையையும் கொண்டே பாறைகளின் மேல்விட்டத்தில் தீட்டபட்ட சித்திரங்கள் இன்றளவிலும் உயிர்ப்புடன் உள்ளன. குடவரை உள்ள பாறைகளில் ஆங்காங்கே தமிழி கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

தற்சமயம் தமிழக தொல்லியல் துறையால் பராமரிக்கப்படும் இக்குடைவரையில் ஓவியங்களின் பாதுகாப்பு கருதி புகைப்படம் எடுக்க அனுமதி இல்லை. மேலும் தொல்லியல் துறையுடன் தமிழக சுற்றுலாத் துறையும் இணைந்து பூங்காவும், படகு குழாம் அமைத்துச் சுற்றுலா தலமாக மேம்படுத்தியுள்ளனர். வட இந்தியாவில் இருக்கும் அஜந்தா குகை ஓவியங்களை ஒத்து இருந்தாலும் சித்தன்னவாசல் ஓவியங்கள் அதனினும் தனிச்சிறப்புடன் விளங்குகிறது.

# பல்லவர்களின் துவாரபாலகர்கள்

– ஆயிஷா பேகம்,

முனைவர் பட்ட மாணவர்



கடவுளின் வாயிற்காப்பாளராகவும், மெய்காப்பாளராகவும் விளங்குகிற துவாரபாலகர்களின் தோற்றத்தை ஒரு சில புராணங்களின் வாயிலாக அறிய முடிகிறது.ஸ்ரீ பகவதபுராணம் விஷ்ணுவின் துவாரபாலகர்களான ஜெயா மற்றும் விஜயா என்கிற வாயிற்காவலர்களைப் பற்றி அறியமுடிகிறது. இத்துவாரபாலகர்கள் பிரம்மாவின் நான்கு புத்திரர்களின் தவத்தால் உருவானவர்கள் என்று குறிப்பிடுகிறது.

சமஸ்கிருதத்தில் வாயிற்காப்போருக்கு "துவாரபாலகர்கள்" என்று பொருள் (துவாரம்- என்றால் வாயில் எனப் பொருள்படும்). துவாரபாலகர்கள் என்பவர்கள் "அஷ்டதிக் பாலகர்கள்" எனப்படும் எட்டுத்திசை கடவுளர்களில் ஒருவர் எனச் சீன-புத்தமதக் களஞ்சியம் கூறுகிறது. இந்து மதத்தில் மட்டுமில்லாமல் பௌத்தம், சமணம் போன்ற சமயங்களிலும் துவாரபாலகர்கள் இருக்கிறார்கள்.

சமண மதத்தில் துவாரபாலகர்களை "யக்ஷன்" மற்றும் "யக்ஷி" என்று அழைப்பார்கள். இறைவன் மற்றும் இறைவியின் துவாரபாலகர்களை இரண்டு வகையாகப் பிரிப்பார்கள்.

1) துவாரபாலகர்கள் - ஆண் தெய்வங்கள்
2) துவாரபாலகிகள் - பெண் தெய்வங்கள்

துவாரபாலகர்கள் பெரும்பாலும் தங்கள் சார்ந்த இறைவனின் ஆயுதங்களையே கொண்டிருப்பர். எ.கா சிவனின் துவாரபாலகர்கள்-திரிசூலம் மற்றும் மழு, விஷ்ணு - சங்கு மற்றும் சக்கரம்

ஆதியில் சிவபெருமான் மற்றும் திருமால் அவர்களது தேவிகளுக்கு மட்டுமே துவாரபாலகர் மூர்த்தங்களை உருவாக்கினார்கள். காலப்போக்கில் பிற தெய்வங்களுக்கும் துவாரபாலகர்கள் உருவானார்கள். எதற்காகத் துவாரபாலகர்களை உருவாக்கினார்கள் என்ற கேள்விக்குப் பல்வேறு பதில்கள் காரணங்களாய் அமைகின்றன.இறைவனை உலகை ஆளும் அரசனாகப் பாவித்து அவரின் ஏவல் ஆட்களாய்த் துவாரபாலகர்கள் உருவாக்கப்பட்டிருப்பர்.

சங்க காலத்தில் கோயில்கள் எழுப்பப்பட்டிருந்தாலும் அதில் துவாரபாலகர்கள் செதுக்கப்பட்டிருந்தார்களா? என்பதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை. அவ்வாறு இருந்திருந்தாலும் அவை சுடுமண்ணால் செய்யப்பட்டிருக்கலாம். சங்க காலத்தைச் சார்ந்த துவார பாலகர்களின் உருவங்கள் கிடைக்கவில்லை என்றாலும் அவற்றின் முழுமையான வரலாறு கி.பி 6-ம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது.

சங்க காலத்திற்கு அதாவது கி.பி 3-ம் நூற்றாண்டிற்குப் பிறகு துவாரபாலகர்களின் வளர்ச்சி என்ன ஆனது? களப்பிரர்கள் காலத்தில் கோயில்கள் இருந்தனவா? என்பதற்கான ஆதாரங்கள் சரிவர இல்லை. சேக்கிழாரின் பெரியபுராணம் களப்பிர மன்னன் சைவ சமயத்திற்கு எதிராக இருந்தான் என்று கூறுகிறது.

துவாரபாலகர்களின் வளர்ச்சியைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்

- பல்லவர்கள்
- சோழர்கள்
- பாண்டியர்கள்
- விஜயநகரர்கள்
- நாயக்கர்கள்
- நகரத்தார்கள்
- நவீன காலம்

பொதுவாகப் பேரரசர்கள் பின்பற்றிய கலைப்பாணியை (சிற்பங்களில்) அவர்களுடைய



சிற்றரசர்களோ அல்லது மற்ற பேரரசர்களோ பின்பற்றுவார்கள்.(எ.கா) (பல்லவர்கள் - சோழர்கள்) (சோழர்கள்-பழுவேட்டரையர்கள்).

துவாரபாலகர்களின் காலத்தையும், வளர்ச்சியையும் பின்வரும் குறிப்புகளைக் கொண்டு பிரிக்க முடியும்.

1) உடலமைப்பு
2) ஆயுதங்கள்
3) ஆபரணங்கள்
4) நிற்கும் முறைகள்
5) கை முத்திரைகள்
6) முக அமைப்பு

தமிழ்நாட்டில் சுமார் 1000க்கும் மேற்பட்ட பழைமையான கோயில்கள் உள்ளன. இவற்றில் உள்ள துவாரபாலகர்களின் கலையழகும், நுட்பமும் வெவ்வேறானவை.துவாரபாலகர்கள் என்றதும் நம் நினைவுக்கு வருவது பருத்த உடலும் கோரமுகமும் தான். சாந்தமாக உள்ள துவாரபாலகர்களும் இருக்கிறார்கள்.

பல்லவர்கள் காலம் (கி.பி 6-ம் நூற்றாண்டு முதல் 9-ம் நூற்றாண்டுவரை) கி.பி 7-ம் நூற்றாண்டு, தமிழ்நாட்டில் பல்லவர்கள் காலக் கலைக்கோயில்களின் தொடக்கக் காலம் எனலாம். பல்லவர்களின் கோயில்கள் வெறும் கட்டடக்கலைக்கு மட்டுமில்லாமல் சிற்பங்களுக்கும் பெயர் போனவையாக விளங்குகின்றன.

பல்லவர்களின் கோயில்கள் மற்றும் சிற்பக்கலை வரலாற்றைக் கட்டடகலை தோற்றத்தை அடிப்படையாகக் கொண்டு இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1) முற்காலப் பல்லவர்கள் (சிம்ம விஷ்ணு-மூன்றாம் மகேந்திரவர்மன்)
2) பிற்காலப் பல்லவர்கள் (இராட்டிரகூடர்கள் வழிவந்தவர்கள்)

முற்காலப் பல்லவ மரபைச் சார்ந்த முதலாம் மகேந்திரவர்மன் குடைவரை கோயில்கள் மற்றும் அவற்றில் உள்ள சிற்பங்களின் பிதாமகனாகக் கருதப்படுகிறான். பல்லவர்கள் தங்கள் கலைப்படைப்புகளில் மேலைச் சாளுக்கியர்களின் கலைப்பாணியைப் பின்பற்றினார்கள் என்றும், சாதவாகனர்களின் அலுவலர்களாக இருந்ததால் அவர்களில் நுட்பத்தைப் பின்பற்றினார்கள் என்றும் கூறுவர். மகேந்திரவர்மனின் ஆரம்பக் காலத் துவாரபாலகர்கள் அளவில் பெரியதாகவும், ஆபரணங்கள் குறைவானதாகவும் இருக்கும்.அவனது குடைவரை கோயில்களில் ஒரே மாதிரியான துவாரபாலகர்கள் காணப்படாது.

மகேந்திரவர்மன் துவாரபாலகர்களின் சிறப்புகள்,

உடல் அமைப்பு

1) பெருத்த உடல்
2) அகலமான முகம்
3) தடித்த விரல்கள்
4) தலையில் கொம்புகள்
5) அகன்ற மார்பு
6) தடித்த உதடுகள்
7) பெரிய கண்கள்

கை முத்திரைகள்

1) தாடன முத்திரை
2) தர்ஜினி முத்திரை
3) கடக முத்திரை

மேற்கூறிய முத்திரைகள் பல்லவர்காலத் துவார பாலகர்களில் காணப்படும் மிக முக்கியமான முத்திரைகள் ஆகும். அபய முத்திரை, வரத முத்திரை போன்ற முத்திரைகள் காணப்பட்டாலும், அவை மகேந்திரனுக்குப் பின் வந்த மன்னர்கள் உருவாக்கிய துவார பாலகர்களில் காணப்படுகிறது.

Dr. Siromony என்னும் அறிஞர் பல்லவ துவார பாலகர்களின் தோற்றம் மற்றும் வளர்ச்சியைப் பற்றி ஒரு ஆராய்ச்சி கட்டுரையை 1974-ம் ஆண்டுச்

சென்னை கிறித்துவக் கல்லூரியில் சமர்ப்பித்தார். இக்கட்டுரையில் துவாரபாலகர்களின் ஆடை, ஆபரணங்கள், உடலமைப்பு பற்றி எழுதியுள்ளார். இதில் குறிப்பாகத் தலையில் கொம்புள்ள மகேந்திரவர்மன் காலத்துத் துவாரபாலகர்கள் பற்றி விவரித்துள்ளார்.

பல்லவ துவாரபாலகர்கள் தலையில் உள்ள கொம்புகளும், சூலமும் சைவ சமயத்தைக் குறிப்பன. முக்கியமாக அக்கொம்புகள் சிவபெருமானின் வாகனமான காளையைக் குறிக்கும். இத்தகைய துவார பாலகர்களை "ஆயுத புருஷர்கள்" என்று கூறுவர். மண்டகப்பட்டு, சீயமங்கலம், மகேந்திரவாடி, மாமண்டூர், திருச்சி, பல்லாவரம், போன்ற ஊர்களில் உள்ள குடைவரை துவாரபாலகர்கள் வெவ்வேறானவர்கள்.

வல்லம் என்ற குடைவரை கோயிலில் காணப்படும் தலையில் கொம்புள்ள துவாரபாலகர்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். சில துவாரபாலகர்களின் கலைநுட்பங்கள் தொண்டை மண்டலத்தில் பிரதானமாகக் கருதப்படும். முற்காலப் பல்லவ மன்னர்களில் மகேந்திரவர்மன் காலத்தை முதல் கட்ட வளர்ச்சி என்று கருதலாம். அவருக்குப் பின் வந்த முதலாம் நரசிம்மவர்மன் பல்லவர் கட்டடக்கலையில் இரண்டாம் வளர்ச்சி நிலையை உருவாக்கினான். இவனது காலத்தில் துவாரபாலகர்கள் மேலும் வளர்ச்சியடைந்தார்கள். நரசிம்மவர்மன் காலத்துத் துவாரபாலகர்கள் அளவில் நடுத்தரமாகவும், ஆபரணங்களோடும் இருந்ததுள்ளனர்.

பொதுவாகப் பல்லவர்காலத் துவாரபாலகர்கள் உடலில் முப்புரி நூல் மார்பு மற்றும் இடுப்பைச் சுற்றி இருக்கும். அதே நுட்பம் நரசிம்மவர்மன் காலத்திலும் தொடர்ந்தது.

நிற்கும் கோலங்கள்

பல்லவர் காலக் குடைவரைகோயிலில் துவாரபாலகர்கள் வித விதமாக நிற்கும் அழகைக் காண்கிறோம்.

1) குனிந்து முன் காலைச் சற்று மடக்கி ஆயுதத்தில் மேல் கை வைத்திருத்தல்
2) கையைச் சற்று உயர்த்திச் சாய்த்து இடுப்பில் கையை வைத்தும் இருத்தல்
3) காலை முன்னிறுத்தி இடது கையை கதயில் மேல் இருத்தியும் வலது கையை இடுப்பில் வைத்து இருத்தல்
4) இடுப்பை நன்கு சாய்த்தும் கையினைத் தாடன முத்திரையிலும்(சற்று உயர்த்திச் சாய்த்தும் கால் சிறிது அகன்று இருக்கும்.

"ஊர்த்துவ ஜானு" என்னும் நிற்கும் முறை பல்லவ காலத்தில் இருந்திருந்தாலும் சோழர் காலத் துவாரபாலகர்களில் அதிகம் காணப்பட்டது. பல்லவ காலத் துவாரபாலகர்கள் பெரும்பாலும் ஆடை அணிந்திருந்தாலும், ஆபரணங்கள் குறைவானதாகவும் இருக்கும். அதில் மார்பைச் சுற்றி அமைந்துள்ள முப்புரி நூல் மிக முக்கியமான ஒன்றாக இருக்கும். தலையில் உள்ள கீரிடம் பல்லவ துவாரபாலகர்களின் தனிச்சிறப்பாகக் கருதப்படுகிறது. ஜடா மகுடத்துடன் கூடிய பின் சிகையலங்காரம்(கொம்புகள் இணைந்த) முக்கியமான ஒன்றாகும். பனையோலை சுருள்களும், கால்களில் வீரக்கழல்களும், கை மணிக்கட்டுகளில் தடி வளைகளும், கழுத்தில் சரப்பளி முதலான மாலைகளும் அழகு சேர்க்கின்றன.



துவாரபாலகர்களில் ஆயுதங்கள் என்று எடுத்துக் கொண்டால் அதில் மிக முக்கியமானதாகக் கருதப்படுவது கதாயுதம் ஆகும். இது ஆங்கிலத்தில் "Mace" என்று அழைக்கப்படுகிறது. சிவபெருமானின் துவாரபாலகர்களின் பிரதான ஆயுதமாகக் கருதப்படும் கதை ஆரம்பக் காலத்தில் எளிமையாக இருந்தது. பின்னாளில் இக்கதாயுத்தில் கொடி சுற்றியிருப்பது போல் பல்லவர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டது. (பாம்புபோல் தோற்றம்) இந்த வகையான கதாயுதங்கள் சோழர்கள் ஆட்சியில் மேலும் வளர்ச்சி அடைந்தன.

தமிழ் நாட்டில் பல அரசர்கள் கோயில்களைக் கட்டியிருந்தாலும், அவற்றுள் குறிப்பிடத் தக்க



வகையில் பெரும் புகழினை பெற்றிருப்பது பல்லவர், சோழர் மற்றும் விஜய நகர மன்னர்களே. இம்மூன்று மன்னர்கள் கட்டிய கோயில்களில் உள்ள துவாரபாலகர்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவை மற்றும் வேறுபாடுகள் நிறைந்தவை.

முதலாம் நரசிம்மவர்மன் காலத்துத் துவாரபாலகர்கள்

1) ஒரு பக்கமாகச் சாய்ந்து நின்றல்
2) வட்டமான முகம்
3) நேர்த்தியான கதாயுதம்
4) தடித்த முப்புரி நூல்
5) அளவான அணிகலன்கள்

மாமல்லபுரத்தில் உள்ள திருமூர்த்தி மண்டப துவாரபாலகர்கள் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

முற்காலப் பல்லவர்களின் சிற்பங்கள் வரலாற்றை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம், இதே காலகட்டத்தைச் சார்ந்த மற்ற பல்லவ மன்னர்களும் கோயில்கள் கட்டியிருந்தாலும் கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு மூன்று பிரிவாகப் பிரிக்கலாம்.

1) மகேந்திரவர்மன்-1
2) நரசிம்மவர்மன்-1
3) இராசசிம்மன் என்கிற நரசிம்மவர்மன்-2

பல்லவர்கள் சோழ மண்டலத்தை விடத் தொண்டை மண்டலத்தில் அதிகக் கோயில்களை (நான்கு வகையான கோயில்கள்) உருவாக்கியுள்ளனர். இரண்டாம் பரமேஸ்வரனுடன் முற்காலப் பல்லவ மரபு முடிவுற்றது. இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராசசிம்மன் பெரும்பாலும் கட்டுமான கோயில்களைக் கட்டுவித்தான். இவனது காலத் துவாரபாலகர்கள் அளவில் பெரியதாகவும், அணிகலன்கள் உடையதாகவும் பல்லவர்களின் பிரதான சிகையலங்காரத்தைப் பெற்றிருந்தது. எ.கா காஞ்சி கைலாசநாதர் கோயில் இக்கோயிலில் உள்ள துவாரபாலகர்கள் மூட்டினை மடக்கி அமர்ந்து இருப்பது போல் உள்ளனர்.

பனைமலை தாளகிரீஸ்வரர் கோயில் துவார பாலகர்கள் சிற்பங்களில் அணிகலன்கள் அதிகமாகவும், பின்புறம் எடுப்பாகவும்(சற்று நிர்வாண நிலை), கை விரல் ஒன்று நெற்றியைத் தீண்டியவாறு உள்ளது.

சிற்பங்கள் வேறுபட்டு இருப்பதற்கு முக்கியக் காரணமாக இருப்பது சிற்பிகளின் கற்பனைத் திறனும், கை வண்ணமும் ஆகும். முதலாம் மகேந்திரவர்மன் முதல் இராசசிம்மன வரை அவர்களது கோயில்களில் உள்ள துவாரபாலகர்கள் பல்வேறு வித்தியாசங்களையும் கலையழகையும் பெற்று விளங்குகிறது என்றால் அது மிகையல்ல. பல்லவ குலத்தின் இரண்டாம் அத்தியாயமாகக் கருதப்படுவது இராட்டிரகூடர்-பல்லவர்களின் ஆட்சி நிர்வாகம். சிம்மவர்மனின் தம்பியான பீமவர்மனின் வழி வந்தவர்கள். இரண்யவர்மன் மகன் இரண்டாம் நந்திவர்மன் என்பவன் இளவரசி "ரேவா" வை மணந்தான். அவ்வகையில் ஏற்பட்டதே புதிய பல்லவ-இராட்டிரகூடர்களின் மரபு. இரண்யவர்மன் என்பவன் பீமவர்மனின் மகனாவான்.

பிற்காலப் பல்லவர்களின் சிற்பங்களில் இராட்டிரகூடர்களின் கலைப்பாணி இருக்கும். இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாய் விளங்குவது குண்ணாண்டார் கோயில் துவாரபாலகர்கள். தலையில் ஜடாமகுடத்துடனும், ஒரு காலைப் பின்னால் மடக்கியும் கைகளைக் கதாயுதத்தின் மேல் வைத்தும் இருக்கிறார்கள். கோரமுகம் மற்றும் உதடுகளின் ஓரம் கூர்மையான பற்களைக் கொண்டுள்ள துவாரபாலகர்கள் சோழர் காலத்தில் மிகவும் புகழ் பெற்றது. இந்த வகையான துவாரபாலகர்கள் பல்லவர்கள் காலத்தில் தோன்றியிருக்கக்கூடும்.

வெறும் ஆபரணங்கள், ஆயுதங்கள் மட்டுமில்லாமல் துவாரபாலகர்களின் அளவுகள் கூட அவற்றின் காலத்தைத் தீர்மானிக்கும்.

மண்டகப்பட்டுக் குடைவரை துவாரபாலகர்களும், திருச்சி குடைவரை கோயில் துவாரபாலகர்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாக இருந்தாலும் மண்டகப்பட்டுக் குடைவரை காலத்தால் முற்பட்டது. முதலாம் மகேந்திரவர்மன் துவாரபாலர்கள் பல புடைப்புச்சிற்பங்களாகவே இருக்கின்றனர்.

1) மகேந்திரவர்மன் புடைப்புச்சிற்ப துவாரபாலகர்கள்
2) நரசிம்மவர்மன் புடைப்புச்சிற்ப துவாரபாலகர்கள்
3) இராசசிம்மன் புடைப்புத் தனித் துவாரபாலகர்கள்

அவர்களுக்குப் பின் வந்தவர்கள் கருவறை வெளிப்புறச்சுவர்களில் தனித் துவாரபாலகர்களை (புடைப்பு இல்லாமல்) அமைக்கத் தொடங்கினர். மகேந்திரவர்மனின் துவாரபாலகர்கள் சிறு புன்னகையுடனும், ஒரு வித மகிழ்ச்சியுடனும் காணப்படுவர். பல்லவர்களில் காலத்தில் இருந்தது துவாரபாலகர்களின் வளர்ச்சியின் துவங்கினாலும் பிள்ளையார் பட்டி குடைவரையும், சித்தன்ன வாசல் குடைவரையும் பல்லவர்களுக்கு முற்பட்டது எனவும் இவைகள் பாண்டியர்களுக்குடையது எனவும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அக்கூற்று உண்மையாக இருக்குமெனில் துவாரபாலகர் சிற்பங்களின் காலம் சிறிது பின்னோக்கிச் செல்லும்.

# பாலாற்றங்கரையின் தொன்மையான கோயில்கள்..

## – வேலுதரண்



பண்டைய மக்களின் அத்தியாவசிய தேவைகள், உணவு தண்ணீர் இருப்பிடங்களே.. நீர் நிலைகளை ஒட்டிய குகைகளிலேயே வாழத்தொடங்கினர். நீர் ஆதாரம் குறையும்போது தண்ணீரைத்தேடி இடம் பெயர்ந்தனர். நிரந்தரத் தேவைக்காக ஆறுகளின் கரைகளில் கிணறுகளைத் தோண்டி ஒரே இடத்தில் நிலையாக வாழத் தொடங்கினர். தமிழகத்தில் அப்படி ஓடும் ஆறுகளில் ஒன்றுதான் பாலாறு.

தற்போதைய ஆந்திர மாநிலத்தில் துவங்கி வானியம்பாடி ஆம்பூர், வேலூர், ஆற்காடு, காஞ்சிபுரம் செங்கல்பட்டு வழியாகச் சென்று வங்காள விரிகுடாவில் கலக்கின்றது. வருடம் முழுவதும் ஓடும் ஜீவ நதி இல்லை, மழைக் காலங்களில் மட்டுமே கரை புரண்டு ஓடக்கூடிய நதி. காவிரி, தாமிரபரணிக்கு உள்ள சிறப்புகளைப் போல இந்தப் பாலாற்றிற்கும் பல சிறப்புகள் உண்டு. அதில் ஒன்று தான் இதில் ஓடும் தண்ணீரில் வெள்ளி உலோகம் கலந்து இருப்பது என்பது. மற்றொன்று அதன் கரைகளிலே அமைந்த கோயில்கள். வேலூரைப் பற்றிக்கூறும்போது பாலாற்றைத் தண்ணீர் ஓடா ஆறு என்றுதான் குறிப்பிடுவர் ஆங்கிலத்தில் — *The river without water.* ஆனாலும் கரையின் இரு புறமும் எனண்ணற்ற கோயில்கள். இக்கட்டுரையில் நாம் காணப்போவது நாங்கள் சென்ற கோயில்களைப் பற்றி மட்டுமே. வேலூர் வரலாறு முகநூல் குழுவினரின் மரபு நடையில் கலந்து கொள்ள அன்று காலையில் சென்னையிலிருந்து வருவது சிரமம் என்பதால், முதல் நாளே சென்று ஒரு சில கோயில்களைக் காணத் திட்டமிட்டோம், அதுவும் வேலூருக்கு மேற்கே இரண்டு கோயில்களையும் ஆற்காட்டிற்குக் கிழக்கே இரண்டு கோயில்களும் என்பதே எங்கள் திட்டம்... காலைச் சுமார் 9 மணிக்கு எங்கள் பயணம் துவங்கியது.

முதலில் நாங்கள் சென்ற கோயில் பள்ளி கொண்ட கிராமத்தில் இருக்கும் ஒரு வைஷ்ணவ தலம். வேலூரிலிருந்து சுமார் 24 கிலோமீட்டர் தூரத்தில். வடரங்கம் என்றும் அழைக்கப்படுகின்றது. மூலவர் இங்கு ஆதிசேசன் மீது சயனக் கோலத்தில் வட அரங்கநாதர் என்று வழிபடப்படுகின்றார். அர்த்தமண்டபத்தில் சோட்டா அரங்கநாதர்.. ( வட மொழி நம்மை விடாது போல ). ஐந்து நிலை ராஜகோபுரத்துடன் 12ம் நூற்றாண்டிற்கு முன்பே கட்டப்பட்டு, விக்கிரம சோழன், சம்புவரையர்கள், விஜயநகர மன்னர்கள் பங்களிப்புடன். விக்கிரம சோழனின் கல்வெட்டு 7 ஊர்களின் வரி நீக்கியதை பற்றியதைக் கூறுகின்றது. பிரம்மாவின் யாகத்தை அழிக்கச் சரஸ்வதி பாலாறாக மாறி வேகமாக வந்ததைச் சயன கோலத்தில் கிடந்து திரு அரங்கநாதர் தடுக்கின்றாரெனத் தலபுராணம் கூறுகின்றது. அடுத்தப் பயணம் விரிஞ்சிபுரம் சிவன் கோயிலை நோக்கி.

முன்பே விரிஞ்சிபுரம் சிவன் கோயிலைப் பற்றியும் அதன் சிறப்புக்களைப் பற்றியும், மற்றும் காலம் அதிகமாகத் தேவைப்படும் என்று நண்பர்கள் எச்சரித்தது சரியாகவே இருந்தது. கோயில் ஏழு நிலை ராஜகோபுரம் மற்றும் ஐந்து பிறகாரகங்களுடன் பெரியதாகவே காணப்பட்டது. மூலவர் 10 லிருந்து 11ஆம் நூற்றாண்டில் சம்புவராயர்களால் கட்டப்பட்ட கஜபிருஷ்ட விமானத்துடன் கூடிய கருவறையில் மார்கபந்தீஸ்வரராக அருள்பாலிக்கின்றார். வெளிப் பிரகாரத்தில் காலம் காட்டும் கல், சிம்ம தீர்த்தம், விஜயநகர அரசு காலக் கல்யாண மண்டபம் என்பது கொஞ்சம் பிரமிப்பாகவே இருந்தது.

கல்யாணமண்டபத் தூண்களின் சிற்பங்கள், யாளி மீது குதிரை வீரர்கள், குதிரைமீது வீரர்கள், அந்தக் குதிரை மீதுள்ள சிற்ப வேலைப்பாடுகள், குறுஞ்சிற்பங்கள் என, நேரம் போவதே தெரியாமல் பார்த்துக்கொண்டே இருக்கத் தோன்றியது. வேலூர் கோட்டையில் இருக்கும் ஜலகண்டேஸ்வரர் கோவில் மண்டபத்திற்கு இது ஒரு சவாலாகவே இருக்கும். அவ்வளவு அழகு. மணி 12 வரை காலம் கடந்ததே தெரியவில்லை. இனி மேல் எந்தக் கோயிலும் திறந்து இருக்காது. பிரம்மதேசம் திறந்து இருக்கும் அதனால் அங்குச் செல்லலாம் என்று கிளம்பினோம், பிரிய மனம் இல்லாமல் எங்கள் பயணம் பிரம்மதேசத்தை (நாட்டேரி) நோக்கித் தொடர்ந்தது..

பிரம்மதேசம் செல்லும் வழியே சக்கரமல்லூர் கோயிலைப் பற்றி நண்பர்கள் முகநூலில் பதிவு இட்டு இருந்தது ஞாபகம் வந்தது. அதில் அந்த இறைவன் மனது வைத்தால் மட்டுமே காண இயலும் என்று படித்த ஞாபகம். என்னுடைய 276 பாடல்பெற்ற தலங்கள் யாத்திரையின்போது பல நேரங்களில் சிவன் தரிசனம் தந்தது நினைவில் வந்தது. சக்கரமல்லூரை நெருங்கும்போது மணி மதியம் சுமார் ஒன்றரை. கண்டிப்பாகக் கோயில் நடை சாத்தி இருப்பார்கள். ஆனாலும் எனக்குள் ஒரு நம்பிக்கை கண்டிப்பாகத் தரிசனம் தருவார் என்று. கோயிலை நெருங்கியபோது நாங்கள் எதிர்பார்த்தபடியே நடை சாத்தப்பட்டுத்தான் இருந்தது அருகே இருந்தவர்கள் தர்மகர்ததா வீடு இந்தத் தெருவின் கடைசியில் இருக்கின்றது சென்று கேட்டுப் பாருங்கள் என்று கூறினர். தர்மகர்த்தாவிடம் வேண்ட அவர் மனைவி வந்து கோயிலைத் திறந்து காட்டினார். நல்ல தரிசனம், அம்மாவிற்கு நன்றிகள்..





தூங்கானை மாடக் கருவறை விமானம்

மூலவர் திருக்கண்டீஸ்வரர் பச்சைக்கற்களால் 12ஆம் நூற்றாண்டுக்கு முன்பு கட்டப்பட்ட கருவறையில். கருவரை கஜபிருஷ்ட விமானத்துடன் விக்கிரம சோழனின் கல்வெட்டுக்களைத் தாங்கி நிற்கின்றது. நிலம் தானமாக வழங்கப்பட்டதைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. பிரகார மேடைக்கும் அதிட்டானத்திற்குமான இடைவெளி அகழி போன்று அமைந்து உள்ளது.. பச்சைக்கற்களால் கட்டப்பட்ட கஜபிருஷ்ட விமானத்துடன் கூடிய வழிபாட்டில் இன்றும் இருக்கும் கோயில் இது ஒன்றாகத்தான் இருக்கும் என்பது எங்கள் கணிப்பு. பெரும்பாலான நேரங்களில் கோயில் மூடப்பட்டே இருபதால் கோயிலில் நூற்றுக்கணக்கான வவ்வால்களின் நடமாட்டம் அதிகமாகவே இருக்கின்றது. பிரகாரம் முழுதும் அதன் எச்சங்கள் மூக்கைப் பிடித்துக்கொண்டே இருக்கச் செய்தது.

அடுத்து ஆற்காடு அருகே உள்ள பிரம்மதேசம்.

இதுவும் பாலாற்றங்கரையில் (அருகே) உள்ள ஊர்தான். ஒரு நீண்ட நாள் கனவு. சில வாரங்களுக்கு முன்பு எண்ணாயிரம் எசாலம் அருகே உள்ள பிரம தேசத்தைக் கண்டது முதல் ராஜேந்திர சோழன் தன் வாழ்நாளில் கடைசிக் காலத்தில் வாழ்ந்த பிரம்மதேசத்தைக் காண வேண்டும் என்ற ஆவலில் வேலூரிலிருந்து 60 கிலோமீட்டர் பயணிக்க வேண்டி இருந்ததை ஒரு சிரமமாகக் கருதவில்லை. அருகே நாட்டேரி என்ற பெரிய ஊர் இருப்பதால் இதை "நாட்டேரி பிரம்மதேசம்" என்றே அழைக்கின்றனர்.



தூண் சிற்பங்கள்

ராஜேந்திர சோழன் சிவன் கோவில் என்று கேட்டால் தான் அக்கிராமத்தவருக்குத் தெரிகின்றது.

மூலவர் பெயர் சந்திரமவுலீஸ்வரர். காலத்தால் இடிந்த நிலையில் இருந்த கோயிலை மத்திய தொல்லியல் துறையினரால் சீரமைக்கப்பட்டு அதன் கட்டுப்பாட்டில் உள்ளது. கல்வெட்டுக்களின் படி ஒன்பதாம் நூற்றாண்டு விஜய கம்பவர்ம பல்லவர் காலத்தில் கட்டப்பட்டுப் பின்பு சோழர்களால் பராமரிக்கப்பட்டது என்பதை அறிய முடிகின்றது.

சிலரின் கருத்தான ராஜேந்திர சோழனின் பள்ளிபடைக் கோயில் என்று உறுதி செய்வதற்கான சான்றுகள் எதுவும் காணக்கூடவில்லை. கோயிலின் அதிஸ்டானம் பல்லவர் காலக் கட்டிடக்கலையின் சிறப்பான மணற் கற்களைக்கொண்டு கட்டப்பட்டுள்ளது. பெரும்பாலான கட்டுமானங்கள் சோழர் கட்டிடக் கலையையே ஒத்து இருக்கின்றது. கோயிலின் வடபுறம் முடிக்கப்படாத நுழைவுவாயில் கோபுரம். ராஜேந்திர சோழனின் மறைவுக்குப் பின்பு அவர் பட்டத்தரசி வீரமகாதேவி உடன் கட்டை ஏறுகின்றார். இவ்விருவரின் ஞாபகார்த்தமாகப் பட்டத்தரசியின் சகோதரர் தண்ணீர்ப் பந்தல் அமைத்த செய்தியும் கல்வெட்டாக உள்ளது. கோயில் கருவரை, அர்த்தமண்டபத்துடன். அர்த்தமண்டபத்தில் நந்தி மட்டுமே உள்ளது. கருவரை தேவ கோட்டத்தில் மூர்த்தங்கள் எதுவும் காணப்படவில்லை. விமானத்தில் சிற்பங்கள் குறைந்த அளவே உள்ளது.

இக்கோயிலைக் கண்டு முடித்த பிறகுதான் மதியம் சாப்பிடவில்லை என்ற உணர்வு வந்தது. மீண்டும் வேலூர் நோக்கித் திரும்பப் பயணம். இடையே ஆற்காடு அருகே உணவு விடுதியில் சாப்பிட்டு முடிந்த பின்பு வேலூர் கோட்டையில் இருக்கும் ஜலகண்டேஸ்வரர் கோயிலைக் இன்றைய காணலில் கடைசியாகக் காண வேண்டும் என்பதே எங்கள் திட்டம். வேலூர் கோட்டையின் உள்ளே அமைந்தது தான் ஜலகண்டேஸ்வரர் கோயில். 1981ஆம் ஆண்டுவரை சுமார் 400 வருடங்களாக (முகலாயர்களின் படையெடுப்பு மற்றும் அவர்கள் ஆட்சியின் போது ) மூலவர் இல்லாக் கோயில் *(The Temple without God )* என அறியப்பட்டு வந்தது. கோயில் ஏழு நிலை ராஜ கோபுரத்துடன் நம்மை வரவேற்கின்றது. ராஜகோபுரத்தின் சுவர்கள் சிற்பங்களோடு அருமையாக இருந்தது.

ராஜகோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றால் இடது புறத்தில் இருக்கும் மண்டபம் நம்மைப் பிரமிப்பின் உச்சிக்கே அழைத்துச் செல்கின்றது. காணக் கண்கோடி வேண்டும். 48 தூண்களைக் கொண்ட 16ஆம் நூற்றாண்டு விஜயநகர மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்ட கல்யாண மண்டபம். அதில் எட்டுத் தூண்கள் மட்டும் அடியிலிருந்து உச்சிவரை நான்கு பக்கங்களிலும் சிற்பங்கள். கொடிப்பெண்கள், குதிரை மற்றும் யாளிவீரர்கள். குதிரை வீரர்கள், குதிரைகளின் மீது ஏதோ தூரிகைகளைக் கொண்டு வரைந்த ஓவியங்களைப் போன்ற புடைப்புச்சிற்பங்கள், குதிரை




வாயில் பூட்டப்பட்ட கடிவாளத்தின் சங்கிலியென எதை இங்குச் சொல்ல. எதைவிட. இதைப் படிக்கும் அன்பர்கள் ஒருமுறையேனும் சென்று கண்டால் தான் அதைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். இது தவிர மற்ற தூண்களில் செதுக்கப்பட்ட புடைப்புச் சிற்பங்கள், சைவம் வைஷ்ணவம் என இருபிரிவு கடவுளர்களின், அவதார சிற்பங்கள், அங்குல சிற்பங்கள், மேலும் விதானத்தையும் விட்டு வைக்கவில்லை கலைஞர்கள். விஜய நகரப்பேரரசின் கட்டிடக் கலையின் உச்சம் என்று கூறினால் அது மிகையாகாது. இக்கலைப் பொக்கிசம் ஆங்கிலேயர்கள் காலத்தில் அவர்கள் நாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட இருந்ததாம். கப்பல் கடலில் மூழ்கியதன் காரணத்தால் இங்கேயே விட்டுவிட்டுச் சென்று விட்டனர் என்று அறிந்தது மனதிற்குச் சிறிது ஆறுதலே.

பிரகாரத் தூண்களிலும் புடைபுச்சிற்பங்கள் நிறைந்து காணப்படுகின்றது. நாங்கள் இரவு ஏழுமணி வரை மட்டுமே காண முடிந்தது. பின்பு ஜலகண்டேஸ்வரர் தரிசனம். கல்வெட்டுக்கள் இறைவனின் பெயரை ஜுவரகண்டேஸ்வரர் என்றும், 7 கிராமங்கள் கோவிலுக்கு வழங்கப்பட்டதையும் தெரிவிக்கின்றது.

அடுத்த நாள் காலை வேலூர் மரபு நடை புதிய பேருந்து நிலையத்திலிருந்து கிளம்ப இருந்தது. கிடைத்த அவகாசத்தில் செல்லிஅம்மன் கோயிலைப் பார்த்து வரலாம் என்று கிளம்பினேன். இக்கோயிலும் பாலாற்றங்கரையில் உள்ள ஒரு கோயிலே. தல புராணத்தின் படி இது கருநாடகத்திலிருந்து வந்த பொம்மி மற்றும் திம்மி என்ற இரு சகோதரர்களால் அப்போதைய மன்னனாரால் இடம் ஒதுக்கப்பட்டுக் கட்டப்பட்ட கோயிலாகும்.

சுமார் ஆயிரம் வருடப் புராதனமான கோயிலை 1983ஆண்டு புரணமைத்துப் புதியது போலக் கட்டிவிட்டனர் என்பது ஒரு சோகமே. கருவறையில் சப்த மாதர்கள். இதில் சாமுண்டியை வீரபத்திரரையும், விநாயகரையும் இருபுறமும் இருத்தி செல்லி அம்மனாக வழிபடுகின்றனர். தல மரங்கள் மற்ற கோயில்கள்போல் அன்றி மூங்கில் அத்தி, வேம்பு என மூன்று மரங்கள்.

பின்புறம் பக்தர்களால் வேண்டுதல் நிறைவேறிய பின்பு அளிக்கப்பட்ட சுடுமண் குதிரை மற்றும் யானைகள். பக்தர்கள் அம்மன் மிகவும் சக்திவாய்ந்தவர் என்றும் கேட்ட வரங்கள் அருள்பவள் என்றும் கூறுகின்றனர். கோவில் மணி பிரித்தானியர்காலத்தைச் சார்ந்தது என்கின்றனர். இத்துடன் பாலாற்றின் கரைக் கோயில்கள்பற்றிய இக்கட்டுரையை முடித்துக்கொள்கின்றேன். பிறிதொரு சமயத்தில் மகவும் தொன்மையான கோயில்களில் மீண்டும் சந்திப்போம்.. நன்றி..



# வரலாற்று ஆர்வலர்களை ஒருங்கிணைத்த வேலூர் மரபு நடை

– இராசு. சரவணன் இராஜா, வேலூர்



முகநூல் என்பது வாய்ச் சவடால்களுக்கும், வீண் வம்பு சண்டைகளுக்கானப் பொழுதுப் போக்கு தளமாகப் பயன்படுத்தாமல், அதன்மூலம் தங்கள் மாவட்டத்தில் உள்ள மரபுசார்ந்த இடங்களின் தொன்மை, வரலாற்று முக்கியத்துவம் ஆகியவற்றை அறிய வேலூரில் கடந்த நவம்பர் மாதம் மரபுநடை வரலாற்று ஆர்வலர்களால் இணைந்து நடத்தப்பட்டது.



முகநூலில் வரலாற்றில் ஆர்வமுள்ளவர்கள் இணைந்து வேலூர் மாவட்டத்தில் உள்ள தொல்லியல் இடங்கள், பழையக் கோட்டைகள், அரண்மனைகள், பாறை ஓவியங்கள், கல்வெட்டுகள், கோவில்கள் ஆகியவற்றைத் தேடிச் செல்கின்றனர். அத்தேடல்களை முகநூல் வழியாகப் பதிவு செய்து வருகின்றனர்.

இவர்களின் பதிவுகளால் ஈர்க்கப்பட்ட முகநூல் பயனாளர்களைக் கிழ்கண்ட இடங்களுக்கு "வேலூர் கோட்டை நாணய சங்கம்" சார்பாக ஒரு நாள் மரபு நடைக்கு அழைத்துச் சென்றனர். அவையனவன :

1. சோமநாத ஈஸ்வரர் (முதலாம் பராந்தகர்) மேல்பாடி.
2. அரிஞ்சய சோழன் பள்ளிப்படை (இராஜராஜர்) மேல்பாடி
3. அரங்கநாதர் (இராஷ்டிரகூடர்) எருக்கம்பட்டு.
4. சமணர்கள் பள்ளி துண்டுகரை
5. சமணர் குகை ( கங்கர்கள்) வள்ளிமலை
6. டெல்லி வாயில்( இராபர்ட் கிளைவ்) ஆற்காடு.
7. பச்சைக் கல் சத்துல்லாகான் நினைவிடம்
8. ஆலம்பனா கோட்டை ஆற்காடு.
9. தேசிங்கு ராஜா, ராணி நினைவு மண்டபம், இராணிப்பேட்டை.
10. பல்லவர் குடைவரை (நந்திவர்ம பல்லவர்)
11. இராஜராஜன் நிவந்தன கல்வெட்டு, விளாபாக்கம்.

பல்வேறு தொழில் பின்னணி உள்ள வரலாற்று ஆர்வலர்கள், முதல் முறையாகத் தொண்டை மண்டல சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைக் கண்டு மகிழ்ந்தனர்.



# குறுக்கெழுத்துப் போட்டி
# நூல்களும் ஆசிரியர்களும்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 1 | | | | | | | | | |
| | | | | | | | | 2 | | 3 | | 4 |
| | | | 5 | | | | | | | | | |
| | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | |
| 6 | | | | | | 7 | | | | | | |
| | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | |
| | 9 | | | | 10 | 11 | 12 | | | | | |
| | | | | | | | | | | | | |
| | | | | 13 | | | | | | | | |
| 14 | | | | | | | | | 8 | | | 16 |

இடமிருந்து வலம்:

1. ஆண்டாள் அருளியது
2. கணிமேதாவியாரால் இயற்றப்பட்ட பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றும், மருந்தின் பெயர் கொண்டதுமான நூல்
5. பௌத்த சமயத்தைக் கூறும் காப்பியம்
6. திருமுருகாற்றுப்படையைப் பாடியவர்
7. பதினெண்மேல்கணக்கைச் சார்ந்த நீண்ட பாடல்கள்.
13. ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றும், சமண சமய கொள்கை நூலுமாகும்
14. நிகண்டுகளில் ஒன்று

வலமிருந்து இடம்:

12. எட்டு திருமணங்களைக் காட்டுவதால் மணநூல் என்றும் அழைக்கப்படும் காப்பியம்.
16. மூத்த திருப்பதிகம் பாடிய அருளாளர் (இயற்பெயர்)

மேலிருந்து கீழ்:

1. திருமூலர் அருளியது.
3. மாணிக்கவாசகரால் பாடப்பட்டது.
4. நக்கீரரால் எழுதப்பட்ட பதினோராம் திருமுறை நூல்.
10. குறிஞ்சித்திணைப்பாடல்களைப் பாடியவர்.

கீழிருந்து மேல்:

8. இவரை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது தமிழ்நாடு.
9. தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு மாங்குடி மருதனாரால் பாடப்பட்டது
11. ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்று
14. தோலாமொழித்தேவரால் இயற்றப்பட்ட ஐஞ்சிறு காப்பிய சமண சமய நூல்
16. பண்டைய தமிழரின் பெருமைகளைக் காட்டும் புதையல்!



# திராவிட விமானங்கள் எனது வரலாற்றுத் தேடல்

– வேலுதரண் ( வே.அ. வேலுச்சாமி )



கங்கைகொண்ட சோழபுரம் விமானம் உட்கூடு

இக்கட்டுரை ஆவணம் 23ல் வெளியிடப்பட்ட திரு.கி.ஸ்ரீதரன் அவர்களின் விமானங்கள் என்ற தலைப்பில் எழுதப்பட்ட கட்டுரையை அடிப்படையாக வைத்தே எழுதப்பட்டது. ஐயா அவர்களுக்கு என் சிரம் தாழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அக்கட்டுரையை வாசிக்கும்பொழுது பல சந்தேகங்கள் ஏற்பட்டன, ஏனென்றால் அக்கட்டுரையில் கூறப்பட்ட விமானங்களின் அமைப்புகள் ஆர்வலரான, எனக்கு மனத்தினுள் உருவகப்படுத்திக் கொள்ள முடியவில்லை. குறிப்பிடப்பட்ட ஒவ்வொரு விமானத்தின் படத்தையும் கட்டுரையுடன் இணைக்கப்பட்டு இருப்பின் எளிதாக மனதில் இருத்திக்கொள்ள ஏதுவாக இருந்திருக்கும் என்பது என் தாழ்மையான கருத்து. நான் சென்று கண்ட அந்த விமானங்களை அந்தந்த இடங்களில் இணைப்பதே அக்குறையைப் போக்கும் என நம்புகின்றேன்.

கருவறை மீது கற்களாலோ அன்றிச் செங்கல் சுதையாலோ எழுப்பப்பட்ட கட்டிட அமைப்பே விமானம் எனப்படுகின்றது. முழுமையாகச் செங்கற்களாலோ அன்றிக் கற்களாலோ கட்டப்படும் விமானம் "புருஷ்ஹர்மியம்" எனவும் இரண்டும் சேர்த்து கட்டப்பட்டால் அவ்வகை விமானங்கள்



கோனேரிராஜபுரம்



ஐரஹரேஸ்வரர் கோவில்

"ஸ்திரிஹர்மியம்" என்றும் அழைக்கப்படுகின்றது. சில கல்வெட்டுகள் உபானம் முதல் ஸ்தூபி வரை விமானம் என்றே கூறுகின்றன. இவ்விமான அமைப்புத் தமிழகம், ஆந்திரா மற்றும் கர்நாடக மாநில கோவில்களில் பெரும்பாலும் கடைப்பிடிக்கப்படுகின்றன. விமானங்கள் அதிட்டானம் (பீடம்), சுவர் (கால் - பித்தி), பிரஸ்தாரம், (துரை), கழுத்து (கிரீவம்), சிகரம் (தலை), ஸ்தூபி (குடம்) இவற்றுடன் இரு தளங்களையும் சேர்த்து அஷ்டாங்க விமானம் (எட்டு அங்கங்கள்) என்று அழைக்கப்படுகின்றன.

இவ்விமானங்கள் மனித உருவில் இறைவன்/ வாஸ்து புருஷர் நிற்கும் அமைப்பில் உருவகப் படுத்தப்படுகின்றது. சிற்ப நூல்கள் இவ்விமானங்களை அவை அளிக்கும் பலன்களைப் பொறுத்து ஐந்து




கங்கைகொண்ட சோழபுரம் விமானம் உட்கூடு



வரதராஜ பெருமாள் கோவில், காஞ்சி

வகையாகப் பிரிக்கின்றது. அவை சாந்திகம் (அமைதி), பௌடிகளம் (பருமன்), ஜயதம் (வெற்றி), அத்புதம் (அற்புதம்), சாவகாமிதம் (எல்லோராலும் விரும்பக் கூடியது). இவ்விமானங்கள் போகம், பத்ரம், விசாலம், சுவஸ்திகம், கரம், கண்டம், தூங்கானை விமானம், ஸ்கந்தம், விருத்தம், கல்யாண சுந்தரர், கோசல விமானம், பத்யபத்ர மற்றும் சுத்த விமானம் என வகைப்படும். வைஷ்ணவக் கோவில் விமானங்கள் பெரும்பாலும் திருமேனியின் கோலம், முக மண்டலம், தாயார் பெயர் மற்றும் ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் அடிப்படையில் அழைக்கப்படுகின்றன. திருவெள்ளரை கோவிலின் விமானம் பின்புறம் தட்சிணாயனம், உத்தராயணக் காலத்திற்கேற்ப வழியும், காஞ்சி வரதராச பெருமாள் கோவிலில் பின்புறம் இருந்தும் மாறுபட்டு விதிவிலக்காக இருக்கும். மூலவர்களின் கோலத்திற்கு ஏற்ப, கருவறை அல்லது பிரஸ்தரம், கூரைக்குமேல் ஒரு நிலை மட்டுமே இருந்தால் அது "சிறு கோவில்" எனவும் அதற்கு மேல் நிலைகள் இருப்பின் அவ்விமானங்கள் "மகாபிரஸ்தரம்" என்றும் அழைக்கப்படுகின்றது.

மாமல்லபுரத்தில் ஒற்றைக்கற் கோவில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான விமானத்துடனே செதுக்கப்பட்டுள்ளன. காஞ்சி கைலாசநாதர் கோவில், பனமலை தாளகிரீஸ்வரர் கோவில் விமான அமைப்பு சற்றே மாறுபட்டுக் கருவறை சிறு ஆலயங்கள் இணைந்து காணப்படுகின்றது. கருவறைக்கும்



மேலகடம்பூர்



ஐந்து ரதம், மாமல்லபுரம்

வெளிபுறச்சுவற்றிக்கும் இடையே சிறு பாதை அமைப்பைச் சாந்தாரம் என அழைக்கப்படுகின்றது. இவ்வகை அமைப்பு நார்தாமலை, கங்கைகொண்ட சோழீச்சரம், தஞ்சை ராஜராஜேச்சரம் முதலிய கோவில்களில் கடைப்பிடிக்கப்பட்டு உள்ளது. திருவதிகை கோவில் விமானம் அடித்தளம் கல்லாலும், மேற்பகுதி சுதையாலும் கட்டப்பட்டது. கருவறையைச் சுற்றி அங்க ஆலயங்கள் அமைந்துள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட தளங்கள் கொண்ட விமானம் "அஷ்டாங்க விமானம்" என அழைக்கப்படுகின்றது. இதில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நிலைகளிலும் இறைவனின் வெவ்வேறு கோலங்கள் கொண்ட கருவறைகள் காணப்படும். உதாரணமாக, காஞ்சிபுரம் வைகுந்த பெருமாள் கோவில், மதிரை கூடல் அழகர் கோவில் இன்னும் சில..

கோவில் விமானங்களில் மிகவும் சிறப்பானது தூங்கானை வடிவ விமானம், யானையின் முதுகைப் போல இருக்கும். இது முதன் முதலில் பல்லவர்களால் (மாமல்லபுரத்தில்) அறிமுகப்படுத்தப்பட்டு, சோழர்கள் காலத்திலும் தொடர்ந்தது. குறிப்பாகத் தொண்டை நாட்டில் மிக அதிகமாகவும், சோழ நாட்டில் விரல்விட்டு எண்ணும்படியும் இருக்கின்றன. திருவொற்றியூர் கோவில் விமானம் பல்லவர் காலக் கோவிலைப் புரணமைக்கும் போது ராஜேந்திர சோழனால் கஜபிருஷ்ட விமானமாக மாற்றப்பட்டது. பிற்காலச் சோழர் காலத்தில் சில விமானங்கள் தேர்



நடராஜர் கோவில், சிதம்பரம்



பாண்டவ தூத பெருமாள் கோவில்

வடிவில் அமைக்கப்பட்டன. மேலக்கடம்பூர் ஸ்ரீ அமிர்தகடேசர் கோவிலைத் தேவாரத்தில் அப்பர் "கரக்கோவில்" எனக் கூறுகின்றார்.

சீர்காழி, தலைஞாயிறு கோவில் விமானங்கள் சிறிது மாறுபட்ட அமைப்பு கொண்டவை. தலைஞாயிறு கோவில் "கொகுடிக் கோவில்" என்று





சீர்காழி

அழைக்கப்படுகின்றது. இது போன்ற அமைப்புதான் குடந்தை நாகேசுவர சுவாமி கோவிலும் பண்ருட்டி அருகே உள்ள திருத்துறையூர் கோவிலும், திருவீழிமிழலை கோவில் விமானம் "விண்ணிழி விமானம்" என்று அழைக்கப்படுகின்றது. இது பொன்னால் வேயப்பட்டு இருந்ததால் "விண்ணிழிபொற்கோவில்"



பெண்ணாடகம்



பனமலை

எனவும் அழைக்கப்பட்டது. சப்த மாதர்கள் மற்றும் அம்மனுக்காகக் கட்டப்பட்ட கோவில் விமானங்கள் சாலை அமைப்பைக் கொண்டவை. அதனால் "சாலஹார விமானம்" என்று அழைக்கப்படுகின்றது. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலுக்கு அருகே இருக்கும் ஜுரஹரேஸ்வரர் கோவிலின் கருவறை நீள்வட்ட வடிவத்தைக் கொண்டது. இதனை





தலைஞாயிறு

"கல்யாண சுந்தரேஸ்வரர் விமானம்" எனக்கூறுவர். நடராஜர் சன்னதிக்கு மேல் உள்ள விமானம் "சபாஹார விமானம்" எனப்படும். மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கருவறை விமானம் வெளிபுறச்சுவர்கள் எட்டுத் திசைகளிலும் எட்டு யானைகள் நிற்கின்றன. இவ்வமைப்பு கோவைக்கு அருகே காரமடை என்ற ஊரின் சிவன் கோவிலிலும் காணப்படுகின்றது. இவ்வகையான விமானம் "இந்திர விமானம்" என அழைக்கப்படுகின்றது. திருநாங்கூர் கோவில் விமானம் "நந்தியாவர்தன விமானம்" எனவும், அழகர் கோவில் விமானம் "சோமசந்த விமானம்" எனவும் அழைக்கப்படுகின்றது. பிற்காலங்களில் விமானத்தின் உயரம் குறைந்து ராஜகோபுரங்களின் உயரங்கள் அதிகமாக்கப்பட்டன.



# வரலாற்றுச் சிறப்புமிக்க தெள்ளூர் திருக்கோயில்

## – தொல்லியல் அறிஞர். ஸ்ரீதரன் கிரிஷ்ணப்பா





வேலூரிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் அப்துல்லாபுரம் அடுத்து உசூர் செல்லும் சாலையில் ~தெள்ளூர் என்ற ஊர் அமைந்துள்ளது. ஊரின் மேற்குப் பகுதியில், இவ்வூரின் வேளாண்மைக்கும்-நீர் ஆதாரத்திற்குமான பெரிய ஏரி அமைந்துள்ளது.

பெருமாள் கோயில் : ஏரிக்கரையில் பெருமாள் கோயில் அமைந்துள்ளது. செங்கற்களால் கட்டப்பட்ட திருக்கோயில் மிகவும் இடிந்த, சிதைவுற்ற நிலையில, செடி-கொடிகள் முளைத்து வழிபாடற்ற நிலையில் காணப்படுகிறது. கருவறையில் பெருமாள் சங்கு-சக்கரம் தாங்கி தேவியர்களுடன் காட்சி தருகிறார். விஜயநகர கால வடிவமைப்புடன் தெய்வ வடிவங்கள் விளங்குகின்றன.

சிவன் கோயில்: ஊருக்கு வடகிழக்கில் சிவன்கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய கோயில் - இப்பகுதியில் காணப்படும் கருங்கல் பாறையின் மீது கோயில் கட்டப்பட்டுள்ளதால் கருவறை எவ்வித பாதிப்பும் இல்லாமல் அமைந்துள்ளது. கருவறை சோழர்கால கட்டிடக்கலை அமைப்புடன் ஐந்து தேவகோட்டங்களுடன் காணப்படுகிறது. இவற்றில் தெய்வ வடிவங்கள் ஏதுமில்லை.

கருவறையின் மீது அமைந்துள்ள விமானம், ஏகதள (ஒரு தளம்) விமானமாக செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. வட்ட வடிவமான (வேசர) விமானம். அதன் மீது செடி-கொடிகள் வளர்ந்துள்ளன. விமானத்தின் உட்பகுதியைப் பார்த்தால் சோழர்காலத்தில் செங்கற் கட்டிடப்பணி எவ்வளவு சிறப்பாக அமைந்துள்ளது. கருவறை முன்பு உள்ள மகாமண்டபம் விஜயநகர கால கட்டடக்கலை சிறப்புடன் விளங்குகிறது. மண்டபத்தூண்களின் அடிப்பகுதிகளில் நாகபந்த அமைப்புடனும், போதிகை வாழைப்பூ முனையுடன் காணப்படுவதும் சிறப்பு. போதிகைகளின் நடுப்பகுதியில் கண்ணப்ப நாயனார், திருநாவுக்கரசர் சுவாமிகள், திருஞானசம்பந்தர், கோபத்துடன் யானை வீரன் ஒருவனை மிதிக்கும் காட்சி போன்ற புடைப்புச் சிற்பங்கள் காணப்படுகிறது.

மண்டபத்தின் விதானத்தில் மலர்க்கொடி போன்ற அலங்கார வேலைப்பாட்டுக்கு நடுவே யாளியின் வடிவம் புடைப்புச் சிற்பமாக காணப்படுகிறது. இக்கோயிலின் மகாமண்டபம் விஜயநகர கால கட்டடக்கலை சிறப்புக்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இத்திருக்கோயில் கருவறையில் ஆவுடையார் பகுதி மட்டுமே காணப்படுகிறது. மேலும் அதனை அகழ்ந்து பார்த்ததற்கு அடையாளமாக குழியும் உள்ளது.

கல்வெட்டுகள்: இக்கோயிலில் மூன்று கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை இக்கோயிலின் வரலாற்றுச் சிறப்பை எடுத்துக் கூறுகின்றன.

மகாமண்டபத்தில் மிகவும் தேய்ந்த நிலையில் காணப்படும் செவ்வக வடிவ பலகைக் கல்லில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் எழுத்தமைதியை காணும் பொழுது பல்லவர் காலத்தைச் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு) சேர்ந்ததாக விளங்குகிறது.

1. ...க்கு இ[ட்ட] 4. ..ரக..

www.heritager.org



2. ...ற் பட்டி..                5. ..றி
3. ..கங்க

தெள்ளூர் கிராமத்தில் உள்ள ஏரி தொடர்பாக இக்கல்வெட்டு இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

கருவறை நுழைவுவாயில் முன்பாக, மகாமண்டபத்தின் தரையில் புதைத்து வைத்து கட்டப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு குலோத்துங்க சோழனது கல்வெட்டு. இக்கல்வெட்டில் மெய்கீர்த்தி பகுதி காணப்படாததால் இக்கல்வெட்டு மூன்றாம் குலோத்துங்கனதாகக் (1178-1218) கொள்ளலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. குலோதுங்(க)
3. சோழதெவ
4. ற்க்குயாண்டு
5. யக(11)ஆவது
6. ஜெயங்கொண்ட
7. சோழ்மண்ட
8. லத்துப் பங்கள
9. நாட்டு
10. வடக்கில் வ
11. கைமிறை ந
12. நாட்டுத்தெ;ளை
13. யூர் கற்றளிக்கோ
14. மினுளாழய
15. ....நம்

ஜெயங்கொண்ட சோழமண்டலத்து பங்களநாட்டில் இக்கோயில் அமைந்துள்ளதையும், இவ்வூர் தெள்ளையூர் என அழைக்கப்பட்டதையும் கல்வெட்டு குறிக்கிறது. கற்றளிகோயில் எனவும் குறிக்கப்படுகிறது. இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட



தானத்தை கல்வெட்டு குறிக்கிறது. கல்வெட்டின் இறுதிப்பகுதியில்லை. இக்கோயிலின் மகாமண்டபம் மிகவும் சிதைந்த நிலையில், கற்கள் கீழே விழுந்து காணப்படுகிறது. மகாமண்டபத்தின் அதிட்டானப் பகுதியில் காணப்படும், விஜயநகர மன்னர் வீரபிரதாப தேவராய மகாராயர் (II) கி.பி.1435 கல்வெட்டில் "ஜெயங்கொண்ட சோழமண்டலத்து படுவூர் கோட்டத்து பங்கள் நாட்டு வடபுரிவுந்தி நாட்டு அகரம் தெள்ளையூரான புக்களபுரத்து நாயினார்" என்று இக்கோயிலில் குறிப்பிடப்படுகிறார்.

வரலாற்றுச் சிறப்பு மிக்க இக்கோயில் உரிய முறையில் போற்றப்படாமல், செடி-கொடிகள் முளைத்து சிதைந்து காணப்படுகிறது. இக்கோயிலை பாதுகாக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதே இக்கிராம மக்களின் விருப்பமாக உள்ளது.





**அரசு அருங்காட்சியகம், கோவை மற்றும் தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம் இணைந்து நடத்தும் மரபு விழிப்புணர்வு விழா**

# கிறுக்கலாம் வாங்க 2.0



**நாள்: ஜனவரி 26, 2019**

**இடம்: அரசு அருங்காட்சியகம் முகப்பு, கோவை.**

**நேரம்: காலை 9 மணி**





## மின்னிதழ் வாசகர்களுக்கு எங்கள் நன்றி!!!